௩௦ (௧) கல்லெனக் கவின்பெற்ற விழவாற் றுப் படுத்தபிற்
புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ

எ - து: கல்லென்னும் ஓசை உண்டாக அழகுபெற்ற திருநாளை வழிப்படுத்திவிட்ட பிற்றைநாட் பொலிவழிந்த இடம் போலத் தனிமை கொண்டு ஆற்றியிருப்பாளொருத்தியோ ?

௩௨ (௨) ஆள்பவர் கலக்குற வலைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு பைதல்கொண் டமைவாளோ

---

௧. (அ) "அருஅ யாண ரகன்றலைப் பேரூர்ச், சாறுகழி வழிநாட் சோறு நசை யுறாது, வேறு புல முன்னிய விரகறி பொருந" பொருந. ௧-௩. (ஆ) "காதல ருழைய ராகப் பெரிதுவந்து, சாறுகொ ளூரிற் புகல்வேன், மன்ற ...புல்லென். றலப்பேன் றோழியவ ரகன்ற ஞான்றே" (இ) 'விழவுமேம் பட்டவென் னலனே ... ...தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே" குறுந். ௪௧, ௧௨௫. (ஈ) "முழவொலி முந்நீர் முழுதுடனாண்டார், விழவூரிற் கூத்தேபோல் வீர்தவிதல் கண்டும்" பழமொழி. ௩௪௩.

(உ)'ஒத்துமூன் றுகு மொத்தா ழிசையே' என்னும் தேவபாணி விதிச் சூத்திரத்தின் விசேட வுரையின் கண்' இவை பொருள் ஒக்குமெனவே முன்னை அகநிலையொத்தாழிசைக்கண்வரும் இடைநிலைப் பாட்டிற் பொருளொவ்வாது வருதலும் சிறுபான்மை யுண்டென்று கூறி, " கல்லெனக் கவின்பெற்ற...... ........புலம்புகொண் டமைவாளோ " என இடத்தியல் பொருளொழிய இடப்பொருளோடுவமங் கூறினன், " ஓரிராவைகலுட் .. .. .. .. ...... .. .நீப்பின் வாழ்வாளோ " என இடப் பொருளொழிய இடத்தியல் பொருளோடு உவமங் கூறின மையின் வேறுபட்டன " என்பர் பே. தொல். செய். சூ. ௧௪௨.

(ஊ) கல்லென்பது ஒசைப்பொருண்மேல் வருமென்பதற்கு, (நன். இடை. சூ. உ.) மயிலைநாதரும், (எ) எனவென்கிளவி இசைப்பொருண்மை குறித்து வருமென்பதற்கு, (தொல். இடை. சூ. க0.) தெய்வச்சிலையாரும் 'கல்லெனக்...படுத்தபின்' என்பதை மேற்கோள்காட்டினர்.

உ. (அ) "அலவுற்றுக் குடிகூவவாறின்றிப் பொருள்வெஃகிக், கொலையஞ்சா வினைவரராற் கோல்கோடி யவனிழ, லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்" கலி. க0. ௯-எ. (ஆ) "கொள்பொருள் வெஃகிக்குடியலைக் கும் வேந்தனும்......... ..மழையருக்குங் கோள்" திரிகடுகம். ௰. (இ) "முறையி லரசனுடு நல்கூர்ந் தன்று" முது. அக. (ஈ) "கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி, வேத்திய லிழந்த வியனிலம் போல, ...... ......தன்மையிற் குன்றி" சில. கக: ௬0 - ௬௩. (உ) 'ஆள்பவர் கலக்குற மயங்கிய நன்னாட்டு' மணி. உ௩: க0௪. (ஊ) "பழிபடா மன்னவன் படைத்த நாட்டினூஉங், கழிவதென் காரண மறிகு கூறென்றான்" கம்ப. தாட. உ0. என்பவை ஒப்பு நோக்கற் பாலன.



எ - து: நாட்டை ஆளுகின்ற அரசர் தாம் பின்பு கலக்கமுறும்படி அவரால் அலைத்தலைப்பெற்றநாடு பாழ்பட்டாற்போல அழகு கெட்ட முகத்தோடே வருத்தத்தைக்கொண்டு ஆற்றியிருப்பாளொருத்தியோ? எ - று.

க௬ (க) ஓரிரா வைகலுட் டாமரைப் பொய்கையு

ணீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ

எ - து: ஓர் இராப்பொழுதிடத்துத் தாமரையையுடைய பொய்கையுள் நீரால் நீக்கப்பட்டமலர் அவ்விராக்கால முழுவதும் வாடாமல் கிடந்தாற் போல நீ பிரிவையாயின் ஓர் இராப் பொழுதும் உயிர் கொண்டு வாழ்வாளொருத்தியோ? எ - று.

ஏகாரம் மூன்றும், எதிர்மறை.

களமும் நாடும் பூவும், பின்னும் விழவாலும் அரசனாலும் நீராலும் பழைய பொலிவு பெறும். அவைபோலன்றி இவள் நீ நீத்தபொழுதே இறந்துபடுவ ளென்றதனால், தலைவிக்குக் கையாறு நிகழுமென்றாள்.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு

எ - து: என்று யாம் நினக்குச் சொல்லாநிற்க; எ - று.

ஆங்கு அசை; * அச்சுரத்தை யெனினுமாம்.

இது தனிச்சொல்.

கஏ பொய்ந்நல்கல் (உ) † புரிந்தனை புறந்தரல் கைவிட்

டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ

தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே

---

(எ) 'பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்' அரசர் பிரிவரென்னு மிடத்து, 'பிழைத்தது' என்பதற்கு முன்னர் ஆள்பவர் கலக்குறுத்த அலை பெற்று நெறிமுறைமை தப்பிய அந்நாடு என இவ்வடிப் பொருளை உட்கொண்டு உரையிட்டிருத்தல் கண்டறியற் பாலது. தொல். அகத். சூ. உஅ நச.

க. உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு மடம்பட வந்த தோழிக்கண்ணும் தலைவன் கூற்று நிகழுமென்று கூறி, "பாஅலஞ் செவியென்னும் பாலைக் கலியுள் 'தாரிபாலைவகலு ... ... நீநீப்பின் வாழ்வாளோ' எனவும், 'அந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே' எனவும் உடன் கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன் இவளை உடன் கொண்டு போதல் எல்லாவாற்று ளும் முறைமையன் றென்று தோழிக்குக் கூறவனவும் நெஞ்சிற்குக் கூறுவனவும் பிறவுங் கொள்க" என்பர், நச. தொல். கற். சூ. இ.

உ. (அ) 'வினை வெஃகி நீ செலின் விடு மிவளுயிர்' கலி. ௪௦ : உக. (ஆ) (பிரதிபேதம்) : என்றலின், இதனால் † புரிநலியவே.

எ - து: (௧) நெடுந்தகாய்! பொய்யே இவளுக்கு அருளுதலை *விரும்பிப் பாதுகாத்தலைக் கைவிட்டு நீ நயந்த அச்சுரத்திலே செல்வது † எந்நாளிலோ அந்நாள் இவளுடைய பெறுதற்கரிய உயிரைக் கொண்டுபோம்; எ - று.

புறப்படல் கைவிட்டு என்ற பாடத்திற்குக் கைவிட்டுப் புறப்பட லென்க.

இதனால், தலைவற்கு இழிவு பிறந்தது.

(௨) தாழிசையிற் கூறிய எனையுவமங்கள் திணைப்பொருட்கு உவமையாய் ன்றன.

"பிரியுங் காலை யெதிர்நின்று சாற்றிய, மரபுடை யெதிரு முளப் படப் பிறவும்" (௩) என்றதனால் புரிந்தனையென இறப்பும் இறக்குமென திரும் மரபிற் பிறழாமல் வந்தவாறுணர்க.

இது சுரிதகம்.

இஃது ஒன்பதடித்தரவும் சிறுமைக்கு எல்லை கூறிய ஈரடித்தாழிசையும் பொருள்பெற்ற தனிச்சொல்லும் ஆசிரியத்திற்கு உரித்தென்ற மூவடிச் சிறுமையான் வந்த சுரிதகமும் பெற்று வந்த ஒத்தாழிசைக்கலி. (௬)

---

"நின்னின், நிமைப்புவரைவாழாண் மடவோள்" கலி. ௨௧ : ௧௨-௩. என்பவையும் (இ) "செல்லாமை யுண்டேல் லெனக்குரை மற்று நின், வல்வரவு வாழ்வார்க்குரை" என்னும் குறளும் 'தலைமகளை யொழித்து எனக்கென்றாள், தானவளென்னும் வேற்றுமையின்மையின். அக்கால மெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காண வல்லளல்லள், பிரிந்த பொழுதே இறந்து படுமென்பதாம்' என்னும் அதன்விசேட வுரையும் இங்கே கருதற் பாலன. குறள். ௧௧௫௧. பரி.

௧. நெடுந்தகை யென்பதற்கு, பெரிய மேம்பாட்டாளனென்றும் பெரிய

நிலையையுடையவனென்றும் அளத்தற்கரிய தன்மையையுடையவனென்றும் புறப்பொருள் வெண்பாமாலை யுரையாசிரியர் பொருள்கூறுவர்.

உ. "உள்ளுறை யுவம மேனை யுவமமெனத், தள்ளா தாகுந் திணையுணர் வகையே" என்னுஞ் சூத்திரத் துரைக்கண், "இனி, தள்ளாதென்றதனானே 'பாஅ லஞ்செவி' என்னும் பாலைக்கலியுள் தாழிசை மூன்றும் வினை யுவமமாய் நின்று கருப்பொருளோடு கூடிச் சிறப்பியாது தானே திணைப்பொருள் தோற்றுவித்து நிற்பனபோல் வனவும் ........அமைக்க" என்பர், நச். தொல். அகத். சூ. சஉ,நச்.

ந. தொல். கற். சூ. க. நச்சினார்க்கினியருரையில், "பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட், டெந்நாளோ நெடுந்தகாய் நீ செல்வ, தந்நாள்கொண் டிறக்குமிவ ளரும்பெற லுயிரே" என்று மேற்கோளோடு இக்குறிப்பும் உள்ளது.

(பிரதிபேதம்) * விரும்பினையாய்ப். † எக்காலிலே.





(ரு) (க) பரையா பரல்கவா மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் (உ) செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த
முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
(டு) தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்று
(ந.)லென்னீ ரறியா தீர் போல விவைகூறி

னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு
மன்பறச் சூழாதே யாற்றிடை நம்மொடு

---

க. (அ) தலைவரும் விழுமமென்னுஞ் சூத்திரத்து. போக்கற்கண்ணு மென்றிருப்பதனைப் போர்த்தற் கணணு மெனப்பாடங்கொண்டு பெயரென்பது கூறுதற் கண்ணுமெனப் பொருள் கூறி அதற்கும், (ஆ) ஒரு பொருணுதலிய வென்னுஞ் சூத்திரத்து, கலிவெண்பாட்டு அல்லது வெண் கலிப்பாட்டு வெண்டளையான் வந்து ஈற்றடி முச்சீரான் இறு மென்பதற்கும் (தொல். அகத சூ. சஉ; செய். சூ. கசசு.) இளம்பூரணரும், (இ) தலைவி கற்பினுட் பிரிவாற்ருது எம்மையும் உடன் கொண்டு சென்மினென்பதற்கு (தொல். அகத் சூ. சடு.) நச்சினார்க்கினியரும், (ஈ) கலிவெண் பாட்டுப் பதினேரடியான் ஒரு பொருணுதலி வந்ததற்கு (தொல். செய். சூ. கடுரு.) பே; நச. இருவரும் இச செய்யுளை மேற்கோள் காட்டினர். (உ) சிலப். பதிக முகவுரையில் நீரின்மை நிலேயே பாலே நிலத்திற்குச சிறப்பு என்பதற்கும்.(ஊ) சிலப். கக: என 'வரிமரற்றிரங்கிய கரிபுறக் கிடக்கையும்' என்பதன் இரண்டா முறையில், திரங்கிய வென்பதற்கு விலங்கு சுவைத்தலால் திரங்கிய வென்றுமா மென்பதற்கும் 'மரையா மரல்கவர' என்ற பகுதியை மேற்கோள் காட்டினர். அடியார்க்கு நல்லார்.

(எ) மரை மரல் தின்னுதல் "வரிமரற்பாவை மரையேறு கறிக்கும்"
(ஏ) மரை ஆவெனப்படுதல் : "அண்ணன் மரையா" பதிற். உரு.
(ஐ) "கன்றுடை மரையா" புறம். உகஎ.

உ. "பலரு மெய்த வாளிமெய் படப்படப் பனித்துநாப், புலர நொந்து கங்கை மைந்த னிதயமும் புழுங்கினன்" வில்லி. பத்தாம். கஉ.

௩. "ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமா
ருண்டே" என்பது பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப்
பொருந்தி நிற்கு மிடமுமுண்டென்னும் பொருளை அருத்தா பத்தி
யாற்றாற் தென்று கூறி.(அ)"என்னீரறியா நீர் போல விவை கூறின்"

(பிரதிபேதம்) * கூறல்,



௧௦ (க) துன்பந் துணையாக நாடி னதுவல்ல

தின்பமு முண்டோ வெமக்கு.

இது தலைவன் செலவுக்குறிப்பறிந்து நீர் செல்லுங் கடுஞ்சுரத்துத் துன்பத்திற்குத் துணையாக எம்மையும் உடன்கொண்டு சென்மினெனத் தலைவி கூறியது.

இதன்பொருள்

காடு, சுற்றத்தையுடைய மறவர்தம்முடைய மூட்டுவாயை யுடைய அம்புகள், மலைவளர்ந்து போதற்கரிய காட்டிடத்து அரிய வழியைப் போவார்மேலே அழுந்துகையினாலே, உடலஞ்சுருங்கி உள்ளுண்டாகிய நீர் வற்றுகையினாலே உலர்ச்சியாலே வாடுகின்ற நாவிற்கு, மரையா மரலைத் தின்னும்படியாக மாரி வறக்கையினாலே தண்ணீர் பெறாத மனத் தடுமாற்றத்தையுடைய வருத்தத்தை அவருடைய கண்ணீர் வீழ்ந்து அந் நாவினை நனைத்துப் போக்குங் கடுமையை யுடையவென்று நீர் உடன் சேறலை மறுத்துக் கூறினால், யான் உயிர்தாங்கியிருத்தலாற்றாது இறந்து படுதலை அறியாதிருந்தீர்போல உடன்சேறலை மறுத்த இம்மொழிகளைக் கூறுதலாற் பெற்றதென்? நெடுந்தகாய்! இக்கூற்று நினக்கு உரிய நன்றாகிய சீர்மைகளை உடைய அல்ல! இனி நீ எம்மிடத்து அன்பு நீங்கப் பிரிதலைக் கருதாதே அவ்வாற்றிடைத் துன்பத்திற்கு எம்மையுந் துணையாகக் கொண்டு நும்மொடு போதலை ஆராயின் அதுவல்லது எமக்கு வேறோர் இன்பமும் உண்டோ? எ - று.

இதனால் தலைவிக்குக் கைம்மிகலும் தலைவற்கு இடுக்கணும் பிறந்தன.

என ஒருவனைப் பன்மையாற் கூறிப் பின்னர் "நின்னிரவல்ல நெடுந்தகாய்" என அவனை ஒருமையாற் கூறுவன போல்வனவும் இதனாற் கொள்க வென்பர், நச; தொல். எசச. சூ. சுரு. (ஆ) முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி ஆற்றுப்படை யல்லாத வழியும் பலரில் வழியும் பன்மையொடு மயங்கி வருமென்பதற்கு (தொல். எசச. சூ. சுரு. 'முன்னிலை') இதனை மேற்கோள் காட்டுவர் தெய். (இ) உயர்வு சிறப்புக்களுள் (ஒன்றின்) 'பால் வழுவமைதி யெனு அமைப்பர் இ-வி. நூலார்; இ-வி. சூ. ௩௦௦. (ஈ) "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்னும் (கசச) குறளின் விசேடவுரையில் இதனை உயர்ந்தற்கட் பன்மை யொருமை மயங்கி வருதற்கு மேற்கோள் காட்டுவர்; பரிமே. பேராசிரியரும் "நின் மொழி யென்று உம்மவே யென்றது 'என்னீரறியாதீர்... நெடுந்தகாய்' என்பது போல எண்மேம் பன்மையு மொருமையு மயங்கி நின்றன" என்பர்; கோவையாருரை. கருடு.

௧. "துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய, நெஞ்சந் துணையல் வழி" குறள். ௧௨௯௯.



"பெற்றமுமெருமையு மரையுமாவே"(௧)என்றதனான் மரையாவென்றார்

இதன்கண்ணே, இவள் தன்(௨)பெண்டன்மையாற் கூறத்தகாதது கூறக் கேட்ட யாம், உலக ஒழுக்கத்தை அறிந்து, இவளை உடன்கொண்டு செல்வே மாயின், இவள் தண்ணீர் பொறாத அருந்துயரம் நமக்கு மிக்க வருத்தத்தைத் தருமாகலின், இவடன்னை உடன்கொண்டு சேறல் எவ்வாற்றானுந் தகாதென் றும்,யாம் அன்புபெருகுமாறு சூழ்ந்த காரியத்தினை இவள் அன்பு*அருகும்படி

சூழ்ந்தேமாகக்கருதி † இதற்குமாறு கூறினளென்றும் உட்கொண்டு, இவ் இவளை ஆற்றுவித்துப் பிரிவேமெனச் செலவழுங்கினமை தோன்ற நிற்றலின் வேறுமொரு பொருள் தோன்றி நின்றது.

இஃது "ஒருபொருணுதலிய வெள்ளடி யியலாற், றிரிவின்றி ‡ வருவது கலி வெண் பாட்டே" (௩) என்பதனாற் பாட்டிற் பொருளோடே வேறும் ஒருபொருள் தோன்றி நின்று பதின்மூரடியான் வந்த கட்டளைக்கலி வெண் பாட்டு. வேறும் ஒரு பொருள் ‖ தோன்ற நிற்றல் எனைப் பாக்கட்குஞ் சிறி துளவேனும் பொருளாற் செய்யுள் வேறுபட்டுவரும் விதியின்மையின் ஆண்டு — அவற்றுராய்ச்சியின்றாயிற்று. இது வெண்பாவாய் வருதலிற குறித்த பொருளை மறையாது செப்பிக் கூறவேண்டும். இது குறித்த பொருளை மறைத்து வந்தமையானும் தனக்கு உரிய வெண்டளையான் வந்தமையானுங் கலிவெண்பாட்டாயிற்று. "நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே, குறு வெண :.பாட்டி னளவெழு சீரே."(௪) எனவே,(௫) நெடுவெண்பாப் பன்னீரடி யின் இகவாவென்றலின் இதற்குப் பன்னீரடி பெருமையென்று கொண்டார். ▯இக்கலித்தொகையின் இவ்விலக்கணம் பெற்றுவரும் பாட்டு எட்டுள. அவை வந்தவழிக்கூறுதும். பன்னீ . டியின் இகந்துவருவ கலிவெண்பாட்டுக்களுக்கும் அவை வந்துழி அவற்றவற்றிலக்கணங் கூறுதும்.

தலைவி உடன் கொண்டுபோவெனக் கூறுதல் "மரபுநிலை திரியா மாட் சிய" என்னும் (௬) அகத்திணையியற் சூத்திரத்து அமைத்தாம்.

இதனைத் தோழி கூற்றாக்கிக் கூறின், காடு கடுமையவென்று உடன் சேறலை மறுத்துக் கூறினாற் றலைவி இறந்துபடும், அவன் இறந்துபடுதலை அறியாதிருந்தீர்போல இவை கூறலென்னெனக. (௫)

௧. தொல். மர. சூ. ௬௦. இச்சூத்திரவுரையில் மரையென்பது ஆவென்னும் பெயர் பெற்றுவருதற்கு 'மரையா மரல்கவர மாரி வறப்ப' என்பதை மேற்கோள் காட்டினர். பே; நச்.

௨. கலி. ௧௬-ஆம் செய்யுளின் உரை யிறுதிபார்க்க.

௩. தொல். செய். சூ. ௧௫௪. பார்க்க. ௪. தொல். செய். சூ. ௧௫௭.

௫. 'முந்நான்கடியின் இ[ற](க)ந்துவருதலான், நெடுவெண்பாட்டாகாது

கலிவெண்பாட் டாத லுணர்க' என்பது சில. க. உரையிற்றி.
க. தொல். அகத். ரு. சஙி.

(பிரதிபேதம்) : அறும்படி, † இறக்குமாறு, ‡ நடப்பது, || தோன்றி, ÷ அலை ஆரா பச்சி, ∴ பாட்டிற்களவு, [] இத்தொகையின்.



(எ) (க)வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாஅங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் யானொன்
றுசாவுகோ வைய சிறிது ;
ரு நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வின் ஞாணுளர் தீயே
இவட்கே, செய்வுறு மண்டில மையாப் பதுபோன்
மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே ;
சுய நீயே, வினைமாண் காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே
இவட்கே, சுனைமா ணீலங் காரெதிர் பவைபோ
லினைநோக் குண்கண் ணீர்நில் லாவே ;
கரு நீயே, புலம்பி லுள்ளமொடு பொருள்வயிற் செலீஇய
வலம்படு திகிரி வாய்நீ வுதியே
இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோ
லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே ;
கஎ எனநின் ;

சென்னவை யரவத்து மினையவ ணீப்பிற்
றன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவ
ளின்னுயிர் தருதலு மாற்றுமோ
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே.

இது, பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகற்கு நீர் பிரிகின்றீரென்று யான்கூறத் தலைவி கேட்பின் அவட்கு அக்காலத்து நிகழ்வனவற்றை நும்மோடு ஆராய்வதுடையேன்; நீர் செய்யும்பொருள் இவளுயிரையுந் தருகிற்குமோ எனச் செலவழுங்கக் கூறியது.

இஃது "உடன்சேறல் செய்கையொ டன்னவை பிறவு - மடம்பட வந்த தோழி கண்ணும்" (உ.) என்பதனுட் செய்கை கூறுகின்றது.

---

க. தேர்நிலை யுரைத்த லென்பதற்கு ஆராய்ச்சி நிலையாற் கூறுதலென்று பொருள் கூறி, அதற்கு (தொல். கற். சூ. ௩௨. 'காமநிலை') இச்செய்யுளை மேற்கோள் காட்டுவர், இளம்பூரணர். பேராசிரியர். தொல். செய். ௧௫௫-ம் சூத்திரவுரையில் "வேனிலுழந்த வறிதுயங் கோய்களி றென்னும்பாட்டு, தரவும்போக்கும் பாட்டிடை மிடைந்து ஐஞ்சீரடுக்கி வந்தது, இதனுள் தரவடி நான்கும் வெண்பாவாயினும் அச்செய்யுண் முழுவதும் வெண்பா வன்மையிற் கொச்சகமாயிற்று." என்பர்.

உ. தொல். கற். சூ. ௯. நச. இதனுரையில் 'செய்கைகளாவன : தலைவன் கைபுனை வல்வில் நாணுளர்த்த வழி இவள் மையில் வாண்முகம் பசப்



•(க) வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு
வானீங்கு வைப்பின் (உ)வழங்காத்தேர் நீர்க்கவா அங்
கானங் கடத்தி ரெனக்கேட்பின் (௩) யானொன்
றுசாவுகோ வைய சிறிது

எ - து: முதுவேனிற் காலத்தாலே வருந்தின உடல் சிறிதாக வருந்தும் துய்ந்த களிறுகள் (௪)மழைநீங்குதற்குக்காரணமான கொடுமையையுடைய ஊர்களிலே தண்ணீருண்டற்கு(௫)ஊராப்படாத பேய்த்தேரைத் தண்ணீரென்று

அவளாவுய காட்டை நீர் போவீரென்று யான் கூறுதலைக் கேட்பின் நீர் செல்லுங்காலத்து அவட்கு நிகழ்வதொன்றை யான் சிறிது நும்மொடு உசாவு வேனோ? எ - று.

இதனால், தலைவற்குச் சூழ்ச்சி பிறந்தது.
இது தாவு.

ஒ (கூ)நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்
கைபுனை வல்வில் * ஞாண் உளர் தீயே

பூர்ந்தும் அவன் புனைமாண மரீஇய அம்பு தெரிந்தவழி இவள் இனைநோக்குணகண் நீர்நில்லாமையும் பிறவுமாம்' என இவ்வடிகள் உரை நடையாக அமைக்கப் பெற்றுள்ளன.

க. (அ)"யானை, நீர்மருங்கறியாது தேர்மருங்கோடிய றுநீரம்பியி னெறிமுத லுணங்கு, முள்ளூார்ப் பனிக்கு மூசுகரும் கடத்திடை." அகம். உக. (ஆ) 'வேனிலுழந்த வறிதுயங்கோய்களிறு' என்பது தெய்தல் நுணுக்க மாகிய குறிப்புணர்ந்து மென்பதற்கு (தொல். உரி. சூ. ரு௪. சே; உசு. தெய்; ௩௨. ந௪. இ - வி. சூ. உ௮௧. நன். உரி. சூ. க௮. இரா.) மேற்.

உ. "வெண்டை ரங்கமென வீசுபேயிரத மிஞ்சு கானநெறி" வில்லி.

ங. உசாவென்பது சூழ்ச்சி யென்னும் பொருளில் வருதற்கு "யானென் றுசாவுகோ வைய சிறிது" என்பது மேற்கோள். தொல். உரி. சூ.௬௬. 'உயாவே' தெய்.

௪. மழை நீங்குதற்குக் காரணமான கொடுமையென்றது (அ)மறவர் செய் யும் தகாக்கொலை முதலியவற்றை. (ஆ) பாண்டியன் கோவலனைக் கொன்றதனால் அவனுடை பன்னீராண்டு வற்கட முற்றதென்னும் செய்தியும் (இ) 'விண்பொய்ப்பினும் மழை விழாதொழியினும்' தே. என்பதும். ஈண்டுக் கருத்தக்கன.

ரு. "உருவில் பேஎ யூராத் தேரொடு" அகம். க௭.

௯. யாழவென்பது முன்னிலை யசைச்சொல்லாய் வருதற்கு 'நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின் .....ணுளர்தியே' என்பது மேற்கோள். நன். இடை. சூ. ௨௧. மயிலை. வி. இரா. இ - வி. சூ. ௨௭௯. (பிரதிபேதம்) ¹ ஞாணுளர்தியே,



எ - து: ஐயனே, நீ *செய்கின்ற காரியத்திடத்தே செல்லுதலை மனத்தால் நிகழ்த்துகையினாலே நின்னுடைய கையாலே எழுதி வழித்த வலிதாகிய வில்லினுணைத் தடவாநின்றாய்; எ - று.

யாழ, அசை.

உளர்தியென்னும் முன்னிலைவினை, விகாரத்தால் நீண்டது.

இவட்கே,(௧)செய்வுறு (௨)†மண்டில (௩) மையாப் பதுபோன்
(௪) மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே

எ - து: இக்காலத்து இவளுக்கு மறுவறச்செய்தலுறுகின்றதொரு மதியிடத்தே மேகம் பரக்கின்ற தன்மைபோல மறுவில்லாத ஒளியையுடைய முகத்தே பசப்புப் பரவாநிற்கும; எ - று.

செய்வுறு மண்டிலம், இல்பொருளுவமை.

---

௧. (அ) "செய்வுறு நன்கலம்" (ஆ) "செய்வுறு பாவைக்கு" புறம். ௩, ௨௫௩: (இ) "செய்வுறு திவவின்" முருகு. ௧௪0.

௨. "பனி கொண் மா மதி போற் பசப் பூரயான், றனிய ளாவது தக்கதுவோ" சீவக. ௧௫௧0. என வருதலும் ஈண்டுக் கருதத்தக்கது.

௩. (அ) மையாத்த வென்பதற்கு மயங்கல் என்று (குறள். ககஉ.) பரிமேலழகர் பொருள் செய்திருக்கின்றனர். இசசொல்லுக்கு மேகம் பரத்த வென்று இங்கே பொருள் செய்திருத்தலை நோக்கின் இது மை பரப்பது, மை பரப்பது என இருக்கவேண்டுமென்றதோற்றுகிறது. அவ்வாறே ஒருபிரதியில் பேதமும் உள்ளது. ஆனாலும் (ஆ) "காண்மையாத்த வெண்முகத்தை" (இ) "திருவுருத் தேசுநோக்கிச செங்கதி ரொளிமையாக்கு, மொருபுடை" (ஈ) "மீனொளி மையாப்ப" (உ) "பரிதிமுன்னர் வெண்கதிரென மையாக்கும், பேறிருங் கிரணக்கற்றை" (ஊ) "வெய்யவற் கொளிமையார்ந்து வேறுபட் டிருந்தசெந்தீ" என்னுமிடங்களிலும் மற்றும் பல விடங்களிலும் கசசியப்ப முனிவர் இசசொல்லை மழுங்குதலென்ற பொருளிற் பிரயோகித்திருத்தலாலும் இங்கு அப்பொருள்கொள்ளினும் ஒருவாறு பொருந்துமாதலாலும் மையாத்தலென்றே கொள்ளப்பட்டது.

௪. (அ) வாண்முகம் பசப்பூர்தல் கலி. க00: கஅ. (ஆ) பசப்பு நிற வேறுபாட்டை புணர்த்துதற்கு, 'மையில் வாண்முகம் பசப்பூரும்மே' என்பதும். (தொல். உரி. சூ. கக. சே. சூ. க0. நச. இ - வி. சூ. உக0) (இ) இல்லென்கிளவி இன்மை செப்பு மிடத்து ஐகார ஆகாரங்களைப் பெறுது இயற்கையாய் வருதற்கு 'மையில் வாண்முகம்' என்பதும் தொல்.புள்ளி.சூ.எஎ.நச.(ஈ) வாளென்பது ஒளியையுணர்த்துதற்கு, 'வாணமுகம்' என்பதும் தொல்.உரி. சூ.எக. சே. மேற்கோள்.

(பிரதிபேதம்) * செல்கின்ற, † மண்டலமைபாப்பதுபோல்,



(க)நீயே, வினைமாண் (உ)காழகம் வீங்கக் கட்டிப்
புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே

எ - து: நீ தொழின் மாட்சிமைப்பட்ட * கைச்சரட்டை இறுகக்கட்டி நீ மருவிப்போர்த்த புனைதன் மாட்சிமைப்பட்ட (ங) அம்புகளைத் தெரியாநின்றாய்; எ - று.

இவட்கே, சுனைமா (சு)ணீலங் காரெதிர் பவைபோ
லிணைநோக் குண்கண் ணீர்நில் லாவே

எ - து: இக்காலத்து இவளுக்குச் சுனையிடத்து மாட்சிமைப்பட்ட நீலம் மழையை எதிர்கொள்ளுமவை நீர் சொரியுமாறுபோல வருந்தும் பார்வையினை யுடைய மையுண்கண் நீர்நில்லாவாய் வீழாநிற்கும்; எ - று.

கண், நீர் விழுமென இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்துமேல் ்ன்றது.

இணைநோக்கும் பாடம்.

---

க. (அ) "நீயே, வினைமாண் . . . . . . . .ணீர் நில்லாவே" என்னும் பகுதி கொச்சகக்கலியுள் இடைநிலைப் பாட்டுத் தாழிசை யின்றி வந்ததற்கும் (தொல். செய். சூ. கங0. பே.) (ஆ) "நீயே, வினைமாண்...தெரிதியே" என்னும் பகுதி சீர்முழுதுங் கூனாகிவருதல் அளவடிக்குரிய தென்புழிக் கலிப்பாவிற் கூன் வந்ததற்கும் (தொல். செய். சூ. சஎ. 'சீர்கூனாதல்'இள.) (இ) கொச்சகத்தில் தாழிசை தாழம் பட்ட வோசை யின்றி வந்ததற்கும். (தொல். செய். சூ. கங0. நச்.) மேற்கோள்.

உ. (அ) "வம்புகளை வறியாச சுற்றமொ டம்புதெரிந்து" (ஆ) "விரற் றலைப் புட்டில் வீக்கி வெஞ்சிலை கணையோ டேந்தி" சீவக. உஉ0உ. (இ) "முன்கைக், கார்விற் செறிநா ணெறிகைசசெறி கட்டி கட்டி" பெரிய. கண்ணப்ப. சுO. (ஈ) "கோதை தங்கு கரத்தில் வில்" (உ) "விரற்புனை கோதைவல் வில்வின் வல்லவர்" வில்லி. பதின் மூன்றும். உங உகூச. என்பவை ஈண்டறியற் பாலன.

ங. அம்புகளை ஆராய்ந்து கைக்கொள்ளுதலை அம்புதெரித லென்றார்; இவ்வழக்கை, 'தெரிகணை நோக்கி' (கலி. ஙக: உஉ;) என்பதன் குறிப்பிற் காண்க.

௪. (அ) "கனை பெயலிலம்போற் கண்பனி கலுழ்பவால்" கலி. ௬அ: ௧௫. (ஆ) "தண் கயம் பயந்த வண்காற் குவளை, மாரி மாமலர் பெயத் தேற் றன்ன, நீரொடு நிறைந்த பேரமர் மழைக்கண், பனிவா ரெவ்வம்" அகம். ௩௧௫.

திபேதம்) * கைச்சாட்டை (என்று படித்தலுமாம்).



௧௬ நீயே, * புலம்பி லுள்ளமொடு பொருள்வயிற் † செலீஇய

வலம்படு திகிரி வாய்நீ வுதியே

எ - து: நீ பிரிகின்றேமென்கின்ற தனிமையில்லாத நெஞ்சத்தோடே பொருளைத் தேடற்குப்போக வெற்றியுண்டாகின்ற சக்கரத்தினது வாயைத் துகள்போகத் துடையாநின்றாய்; எ - று.

இவட்கே, அலங்கிதழ்க் (௧) கோடல் வீயுகு பவைபோ

லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே

எ - து: இக்காலத்து இவளுக்கு அசைகின்ற இதழினையுடைய கோடற்பூ வீழ்ந்து வீழுகின்றவைபோல விளங்கும் அழகினையுடைய ஒளிபொருந்தின வளை இறையினின்றுக் கழலாநிற்கும்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

௧எ எனநின்,

சென்னவை யரவத்து மினையவ ணீநீப்பிற்

றன்னலங் கடைகொளப் படுதலின் மற்றிவ

(௨) ளின்னுயிர் தருதலு மாற்றுமோ

முன்னிய தேளத்து முயன்றுசெய் பொருளே

எ - து: நீ செல்கின்றது எமக்குக் குற்றத்தைச் ‡ செய்ய நின்னுடைய ஆராவாரத்தும் இத்தன்மையளானவள், தன்னுடைய நலம் நீ நீங்குவையாயின் இரந்து படும் காலத்தாலே கைக்கொள்ளப்படுகையினாலே நின்னை ஒன்று வினவுகின்றேன்; நீ கருதின தேயத்துச்சென்று முயன்று தேடும் பொருள் இன்பந்தருதலேயன்றி இவள்இனிய ||உயிரையும் தருதலைச் செய்யுமோ?எ-று.

என அசை.

இதனால், தலைவற்கு அசைவு பிறந்தது.

எனநின், தனிச்சொல்; எஞ்சியது, சுரிதகம்.

---

க. கோடல்—வெண்காந்தள்; இது வளைக்கு உவமையாதல் (அ) "ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்" (ஆ) "ஊழுற்ற கோடல்வீ, யிதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு" கலி: ௪அ, ௧௨௧. இதற்கு வளை உவமையாதல்: (இ) "வளையுடைத் தன்ன வள்ளிதழ்க் காந்தள்" மலை.௰௪௩.(ஈ)"உடைவளைகடுப்ப மலர்ந்தகாந்தள்"புறம்.௯0.

உ. (அ) ஓது வதற்கண்ண லேபிரிந் தாலொண் மயிலையென்பு, மாது பதுத்தினர் போலோதி வாரும் .. .....நீது படக்கொடி யாவிசென் றூலுக் திருப்புகைக்கே" (ஆ) "திறந்திடு கல்விகள் வேண்டுவ யாவை யுந் தேர்ந்துபின்ன, ரிறந்தயின் ஞரென்பை யன்னார்க ளாக வியற்றுதற் கோர், திறந்தரு விஞ்சையுங் கற்றறி காணவுன் செல்வியையே" என ஓதற்பிரிவின்கண் இக்கருத்து அமைக்கப் பெற்றிருத்தல் காண்க.

(பிரதிபேதம்) * புலம்பியதுளை, † செலீஇயர், ‡ செய்ப. || உயிரைத் தருதலையும்,

7



'தாவும் போக்கும் பாட்டிடை மிடைந்து, மைஞ்சீ ரடுக்கியு மாறுமெய் பெற்றும், வெண்பா வியலான் வெளிப்படத் தோன்றும்" (க) * என்பதனுற் கூறுகி, நீயே இவட்கே என்னுஞ் சொற்கள் இடைநிலைப்பாட்டோடு கூடி ஐஞ்சீரடுக்கிவந்த கலிவெண்பாட்டாயினும் அத்தாவு வெண்பாவாய் ஒழிந்தன வெண்பா அன்மையிற் கொச்சகமாயிற்று. (௧)

(அ) நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலி
னுறலூறு கமழ்கடாஅத் தொல்கிய வெழில்வேழம்
ரு வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
சொல்லாது இறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் கேண்மின்மற் றைஇய ;
க0 வீழுநர்க் கிறைச்சியாய் விரல்கவர் பிசைக்குங்கோ
லேழுநரம் பயன்கெட விடைநின்ற நரம்பறூஉம்
யாழினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ ;
கஉ மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ ;
கரு புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச் செறும்பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு
மரைசினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ ;

எனவாங்கு;

கசு நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று
மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்
தன்னகர் விழையக் கூடி
னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே.

இது சொல்லாது பிரியலுற்ற தலைவன் குறிப்பறிந்து தோழி,பொரு ளது நிலையாமை கூறி † அவளோடு கூடிச் செல்கின்ற இல்வாழ்க்கைச் செலவே பொருளென அவன் செலவழுங்கக் கூறியது.

இதன் பொருள்.

க. தொல். செய் சூ. கஉ௬.

(பிரதிபேதம்) * என்பதனுனுரி. † இவளொடு.



(அ) (க) நடுவிகந் தொரீஇ (உ) நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலி

னுறலூறு (ங) கமழ் * கடாஅத் தொல்கிய வெழில்வேழம்
வறனுழு (ச) நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர
(ரு) விறன்மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரஞ்
சொல்லா திறப்பத் துணிந்தனிர்க் கொருபொருள்
சொல்லுவ துடையேன் (சூ) கேண்மின்மற் றைஇய

எ - து: நடுவுநிலையைக்கைவிட்டு நீங்கி அருளில்லாத அமைச்சன் தன் † மனத்திற்கிடந்த காரியத்தை மனத்தினின் றுந் தோற்றுவிக்க, அது கேட்டுக் கொடுந்தொழிலைச் சூழ்ந்த அரசனது கொடுங்கோல் சுடுமாறுபோலப் பகலோன் கடுகிக் காய்கின்ற கிரணங்களைச் செலுத்திச(எ)சினத்தாற்சுடுகையி

க. (அ) "அலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள் வெஃகிக், கொலை யஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ, லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்" கலி. க0: ௫-எ. (ஆ) "செம்மையி னிகந் தொரீஇ" கலி. கச. (இ) "அறனிலை திரியா வன்பி னவையத்துத், திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து, மெலிகோல் செய்தே

ஞருக" புறம். ௭௧. (ஈ) "முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கு, மிறைதிரியா னேரொக்கல் வேண்டும்." பழமொழி. ௨௦௬. (உ) "உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை, யடங்கவி யுள்ளத் தூகி - நடக்கையி, னொள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின் கைக், கொள்ளி கொடுத்து விடல்." பழமொழி. ௨௦௦.

௨. (அ) "பேதையோன் வினை வாங்க" கலி. ௨௭. (ஆ) "வினைவாங்கி" திருவிளை. பன்றிக்குட்டிகளை. ௧௩.

௩. யானை மதம் கமழுமென்பதனை. கலி. ௨௧:௨; 'கமழ் கடாஅத்து' என்பதன் குறிப்பாலுணர்க.

௪. (அ) "பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்" பெரும்பாண். ௧௯௯. (ஆ) "யானைத், தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து, நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள" புறம். ௧௯. (இ) "வெள்ளி வெண்ணாஞ் சிலான் ஞால முழுவனபோ, லெல்லாக் களிறு நிலஞ் சேர்த்த" களவழி. ௪௦. (ஈ) "அலப்படை யனைய தாஙகுவாய் நெடுங்கை யுலைசெவி வாரணம்" விநாயக. திருநகர. ௨௧.

௫. விறன்மலை: கலி. ௨௦, ௪௪, ௪௫, ௫௩. திணைமொழி. ௨, ௭.

௬. 'ஐய' என்பது பன்மைவினை பெற்றுவருதலை ௧௬-ம் பக்கம் ௩-வது குறிப்பிற் காண்க.

௭. சினமென்பதற்கு வெம்மையென்று பொருள்விளக்குவர் புறநானூற் றுரைகாரர்.

(பிரதிபேதம்) * கடாத்த. † மனநிற்.



ஞலே (க) முன்பு வண்கேளூறுதலையுடைத்தாய் ஊறுகின்ற கமழும் மதத்தினை யுடைத்தாய் இப்பொழுது கெட்ட அழகையுடைய * யானை ஈரமற்ற நிலத்தை உழுகின்ற கலப்பைகள்போலக் கொம்புகளை யூன்றிக் கையை

நிமிர்த்து நிலத்தே கிடவாரிற்க வெற்றியை யுடைய மலைகள் வெம்புதலைச் செய்த போதற்றொழில் அரிய வெய்யகாட்டை, எங்களுக்குச் சொல்லாதே போகத்துணிந்த நுமக்கு ஒரு காரியத்தினைக் கூறுந் தன்மையையுடையேன். அதனைக்கேட்பீராக; எ - று.

இதனால், தோழிக்குச் சூழ்சசி பிறந்தது.

வாங்க என்றது "விருத்திவாஙக" என்றது போல் நின்றது; உறல் (௨) வாயிடத்தே வந்து உறுதலுமாம்.

பொருள், ஆகுபெயர்; மற்று அசை

இது தரவு.

௬. வீழுநர்க் கிறைச்சியாய் (௩) விரல்கவர் பிசைக்குங்கோ
லேழுந்தம் பயன்கெட விடைநின்ற நரம்பறூஉர்
யாழினுந் † நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ - து: ஐயனே, விரும்புவார்க்கு நேயமாய் விரலாலே வாசிக்கப்பட்டு ஒலிக்கும் நரம்பு ஏழும் தம்முடைய பயன் இன்றும்படி (௪) தானக்கோலின் அகப்பட்டு இடைநின்ற (௫) நரம்பு அற்றுப்போம் யாழினுங காட்டில் நிலைபேறில்லாத பொருளையும் அறிவுடையோர்கள் நசசுவர்களோ? நசசார் காண்; எ - று.

---

௧. 'வென்றிக்களிறு' (சீவக. ௧௪.) என்பதன் ?ரையைநோக்குக.

௨. (அ) "வரி ஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற்றொருத்தல்" அகம். எஅ. (ஆ) "வரிஞிமிறார்க்கும் வாய்புகு கடாஅத, தணணல் யானை" புறம். ௬௩. (இ) "வரி வண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த. வண்ணல் யானை" தொல். மேற்.

௩. "விரல் கவர்ந்துழந்த கவர்வி னல்யாழ்" நற். ௩௩௫: "விரல் கவர் பேரியாழ்" பதிற். இள:அ கவர்தல்—அகப்படுத்தல்; பதிற். அ௪. உரை.

௪. (அ) தானக்கோல், "தன்மக ளொருத்திலயத் தானயாழ் கற்கென"

பெருங். (க) ௬௯: ௫. (ஆ) "திருந்தொளிப்பசுந் தொடிக்கரங் கோல்பொரச் சிவப்ப" பாகவதம், (௬௦) மதுரைகண்ட. ௬௫.

௫. "தக்க நரம்பிலா காத யாழும்...... .. ..போன்ற வீமெனிலாத சேனை" வில்லி. பதினோராம். ௫.

(பிரதிபேதம்) * யானைகள, † நிலையிலா (தாழிகைமூன்றிலும்).



௪௨. (க)மரீஇத்தாங் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியுங்காற் பிறரெள்ளப் பீடின்றிப் புறமாறுந்
திருவினுந் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ - து: தாம் மருவி மனத்தாற் கொண்டவர்களைத் தம்மனங்கொண்ட காலம்போலாகாமற் பிரியுமிடத்துப் பிறர் இகழும்படி அவர்க்கொரு வலியின்றாக அவர்கள் * அப்புறமாக மனமாறுந் திருமகளினுங் காட்டில் நிலைபே றில்லாதபொருளையும் அறிவுடையோர்கள் நச்சுவர்களோ? நச்சார்காண்;எ-று.

தாம், பன்மை யொருமை மயக்கம். தானும் பாடம்.

கொண்டக்காலென்னும் [பெயரெச்சத்திற்] (வினையெச்சத்திற்) கால் ஈண்டுக் காலங்காட்டிற்று. கொண்டக்காற்போலாதென்றது தான்வருதற்கு முன்பு அவர் நின்ற † நிலையையுங் கெடுத்துப்போமென்னும் ‡ நினைவிற்று.

---

க. (அ)"பிறந்த குலமாயும் பேராண்மை மாயும், சிறந்ததங்கல்வியு மாயும் ...... ..இன்மை தழுவப்பட் டார்க்கு" (ஆ) "பிறக்கலான் ........

இரப்பாரை யெள்ளாமகன்" நாலடி. உஅ௫. ௩௦எ. (இ) "எளிய ரிவரென் றிகழ்ந்துரையா ராகி, யொளிபட வாழ்த லினிது" இனியது. ௩௦. (ஈ) "இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்" குறள். எ௫உ. (உ) "துளியுண் பறவைபோற் செல்வரோர்ப் பாரு, மெளியாரை யெள்ளாதா ரில்" பழ, உஅஎ. (ஊ) "எளியாரை, யெள்ளானீத் துண்பானே லேதமின் மண்ணுண்டு, கொள்வான்" ஏலாதி. சஎ. (எ) "பரப்புநீர் வையமுற்றுந் தேரினு மில்லை, யிரப்பாரை யெள்ளா மகன்" தகடூர்யாத்திரை. (ஏ) "எள்ளன் மின்னில ரென்றெண்ணி யாரையும்" வளையாபதி. (ஐ) "திருமக ணிலைமையுஞ் செல்வர் கேட்டிரேன், மருவிய மனிதரை யிகந்து மற்றவள், பொருவறு புகழினர்ப் புகிய காமுறு, மொருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே" சூளா. முத்தி. கச. (ஓ) "இல்லோரை யர்ப்ப மிகழ்வோம்" அரிச்சந்திர. மயான. உச. (ஒ) "அருந்திரவியங் காக்கைக் கேதனத்தா டருமோ திரு வன்றியிலே" திருவரங்கத். ௬௬. (ஔ) "இருங்கடற் புவி யிடத்தினில் லாரையெல் லாருமெள் ளுவரென்று, வொருங் குணர்ந்தமுன் னோருரைத் திட்டஃ தண்மையென் றளங் கொண்ணீ" குசேலோ. மேல்கடலடைந்த. கசுச. என்பனவைகளும், (ஃ) "இழவ ரின்னே ரென்னுது பொருடான், பழவினை மருங்கிற் பெயர்பு பெயர் புறையும்" (கலி. உக: ௬௦-கக) என்பதன் குறிப்பில் இவ்விடத்திற்குப் பொருந்துவனவும் ஈங்கு நோக்கத்தக்கன.

(பிரதிபேதம்) *புறமாக, † இலைமையும், ‡ இலயிற்று.



கரு. புரைதவப் பயனோக்கார் தம்மாக்க முயல்வாரை
வரைவின்றிச்(க)செறும்*பொழுதிற் கண்ணோடா துயிர்வௌவு

† மறைசினுங் நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ

எ - து: தமக்கு உயர்ச்சி மிகும்படியாக, (உ) தாம் பெறும் பயனைப் பாராதே அரசராக்கதனை ‡ முயன்றபோதும் அமைச்சரைக் கோபிக்கும் பொழுது அக்காரியத்தினை முயன்றவரென்று ஒருவரைவின்றிப் (ங) பழமையையும்பாராதே பொருண்முதலியனவன்றி உயிரைக்கொள்ளும் அரைசினுடைய காட்டில் நிலைபேறில்லாத பொருளையும் அறிவுடையோர்கள் நச்சுவார்களோ? நச்சார்காண்; எ - று.

(ச) || அம்தன்மையாலுயிரைவௌவிய அரசனும் அன்றேகெடுவனென்றார்.

இவை மூன்றும், தாழிசை.

---

க. (அ) "ப லைசெல வுயர்க்கேசாலகிசி. சோர்ந்தாரை யொருவிலைய, வரை ரில்லா விழுமமுறீஇ நடுக்குறைத்துந் தெறன்மாலை, யரைக" கலி. கசுகூ.க-ங. (ஆ) "பொறிசெறிந்த மாண்பினராயப் பொருந்தலர்ச்செற் றிருசிதியஞ். செறிதருமா நீட்டியரு வினைவாயகு செயலி னரு, முறுபிழையுட் சிறிதியற்றி னுறுத்திடுவர் வயவேந்தர்" நைடதம். அன்னந்தைத்த தூது. கOசு. (இ) "தொழுந் தகை யமைச்சரைச் சுளித்து நோக்குறு, மொழிந்தன ளிடியொடு முகிலுஞ் சிந்துவோ" கம்ப. அதிகாயன். க.

உ. (அ) "பால்வரு முறுதி யாவுந் தலைவர்க்குப பயக்கு மோரா" கம்ப. அயோத்தி. மந்திர. அ. (ஆ) "இன்னுயி ரழியும் போழ்து மிறைவனுக் குறுதியல்லான். முன்னிய முகமன்மாட்டா முறைமிய வறிவினரை" சூளா. தூது. உசு. (இ) "அறு மரசன் பாலன்பு மவனுக் காவதறியறிவு, நாளு மவர்தம் கல்லகாம னன்று முடிக்கு முளத்துணிவு, பூளும் வினைகளுக் தன்காலத்தின் மொய்த்த பொருளின் விழையாத, சோளுமுடையான் புரிவினையிற் குற்றமுறாது குணமேயாம்" "முறைவழிப் பிறழ்தல் செல்லா முதுக்குறை யமைச்சர் தம்மைச், சிறையிடைப் படுத்து" விநாயக. அரசியற்கை அக; வன்னி. கக.

ங. "பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன் றும் கொள்ளா வெகுளின்மன், காதன்மை யுண்டே யிறைமாண்

டார்க் கேதிலரு. மார்வலரு மில்லை யவர்க்கு" நீதிநெறி. சஎ.

ச. (அ) "தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை, வீயா தடியுறைந் தற்று" (ஆ) "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமே வரும்" குறள். உ0அ; நகக. (இ) "முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்" கொன்றை. (ஈ) "முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்" சில. உக: ந-ச. (உ) "முற்பகல் (பிரதிபேதம்) * பொழுது, † அரசினும், ‡ முயனறும். || அதனன்மையான அரசனும் உயிரை வௌவிய அன்றே.



எனவாங்கு

எ - து: என்று யான்சொல்லாநிற்க; எ - று.

ஆங்கு, அசை.

இது தனிச்சொல்.

கக நச்சல் கூடாது பெரும விச்செல
வொழிதல் வேண்டுவல் சூழிற் பழியின்று
(க) மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பித்

* தன்னகர் விழையக் கூடி
னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே

எ - து: பெருமா! பொருளை நச்சுதல் நினக்குப்†பொருந்தாதால்; ஆரா ...ற் பழியின்றாக இச்செலவை நீ தவிர்தலை யான்விரும்புவேன்; அரசன் ...க்க வருகின்ற விருந்தினரைப் பாதுகாத்துத் தன்மனைவி விரும்பும்படி ...வளுடன் கூடியிருக்கில் இனிய முயக்கத்தை யுடைத்தாகிய அகற்சியை ...டைய மார்பனே நிலைபெறும் பொருள் அதுகாண்; எ - று.

நகர், ஆகுபெயர்.

இதனால், தலைவற்குக் கருது நல்பிறந்தது; தோழிக்குச சூழ்சசிபிறந்தது.

இது 'பழியின்று' என, ந (உ) தாழிசைப் பொருள்களைகொணடு பின்பு மன்னவன் புறந்தர வருவிருந்து . ...பொருளே' எனப் போக்கியற் பொருளையு பகொணடு இற்ற சுரிதகமும் எனை உறுப்புக்களும் பெற்ற ஒத் தாழிசைசகலி. "தரவிய லொத்தும்" என்னுஞ் சூத்திரத்துப் புரைதீர் ரன்பதனாற் போக்கியற் பொருளுங் கொண்டு ‡ புரைபடாது வந்தது. (எ)

---

செய்வினை பிற்பக லுறுநர்ின்" பெருங். (க) இசு உருக.(ஊ) "அற்பக ஞாகருமீ னவரை நுங்குமான், முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது, பிற்பக றமக்குறும் பெற்றியென்னவே" சூந்த. இரண்டாநாட் ருசுஙு.

க. "வாழி யாதன் வாழி யவினி, நெற்பல பொலிக" என்று மூலமும், 'காவற் பொருட்டு அரசன் வாழ்க; விருந்தாற்றுதற்பொருட்டு நெற் பல பொலிக' என்னும் பழையவுரை விளக்கமும் (ஐங். க.) இங்கே ஒப்பு நோக்கத் தக்கன.

உ. (அ) சுரிதகம் தாழிசையின் பொருண் முடிபைத் தன்பாற் பெற்று நிற்றற்கு (நசசுபவோ என்பன தாழிசைகளிலுள்ளன) 'நச்சல் கூடாது பெரும விச்செல, வொழிதல் வேண்டுவல்' என்பதையும் போக்கியற் பொருள் வந்தால் அவ்விரண்டையும் புரைபடாமற் பொருந்தச் செய்வரென்பதற்கு 'தன்னகர் விழையக் கூடின்' என்பதையும் (தொல். செய். சூ. கருஎ.) மேற்கோள் காட்டுவர், பேராசிரியர். (ஆ) "புரைதீரென்றதனால், தாழிசைப் பொருளேயன்றி அவற்றோடு போக்கியற் பொருளுங்கொண்டு புரை[ட](ர)படாது வருவனவுங் கொள்க. அது 'அரசினு நிலையில்லாப் பொருளையு நச்சுபவோ' என முடித்தலின் 'நசசல்கூடாது பெரும விசசெல, வொழிதல் வேணடுவல்

பிரதிபேதம்) * தன்னகர், † பொருந்தாது, ‡ புரைபடாது.



(கூ) (க) எறித்தரு கதிர் தாங்கி யேந்திய குடைநீழ

அறித்தாழ்ந்த காகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்

கூ. வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும

சு. காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவா ருயிர்நீர் போறிர் ;

கஉ. பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே ;

கரு. சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே ;

கஅ. ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே ;

எனவாங்கு ;

உஉ. இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்

சிறந்தாளை வழிபடீஇச் சென்றன
மாறந்தலை பிரியா வாறுமற் றதுவே.

இஃது உடன்போய தலைவிபின் சென்ற செவிலி இடைச்சுரத்து முக்கோற்பகவரைக்கண்டு இவ்வகைப்பட்டாரை ஆண்டுக்காணிரோவென

---

சூழிற் பழியின்று' எனத்தாழிசைப் பொருளைக்கொண்டு பின்பு 'மன்னவன் புறந்தர வருவிருந் தோம்பி, நன்னகர் விழையக் கூடி, னின்னுறல் வியன்மார்ப வதுமனும் பொருளே' எனப் போக்கியற் பொருளையும் கொண்டிற்றது" என்பர், நச்; தொல். செய். சூ. கசுஎ.

க. 'எறித்தரு ..மற்றதுவே' என்பது, செவிலிவரவின்கட் கூறியதற்கும். தொல். அகத். சூ. சo. நச். இடைச் சுரத்துப் புலம்புஞ் செவிலியை எதிர் வருவார் கண்டு தெருட்டியதற்கும் இறை. சூ. உகூ; மேற்கோள்.



வினவியாட்கு, அவரைக் கண்டு அஃதறமெனவே கருதிப் * போந்தேம், நீரும் அவர்திறத்து † எவ்வம்பட வேண்டாவென ‡ எடுத்துக்காட்டி அவர் தெருட்டியது.

இதன் பொருள்.

(க) எறித்தரு கதிர்தாங்கி யேந்திய (உ) குடைநீழ
(ங) லுறித்தாழ்ந்த கரகமுஞ் (ச) முறைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
(ரு) குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்

௧. "எறித்தரு கதிர்தாங்கி... .. .....காளிபோ பெரும" என்னும்பகுதி சுரத்திடை விளுதற்கு மேற்கோள். தொல். அகத். சூ. ௪௦. இளம்.

௨. (அ) 'விரிகுடை தண்டே குண்டிகை' (அந்தணப்பூத வருணனை) சிலப். ௨௨: ௩௧. (ஆ) "குடையார் நிழலுறி சேர்கர கத்தொடு குன்றிடத்து, நடையான் மெலிந்து வருகின்ற வந்தணிர் ஞால மெல்லா, முடையா ளொளிவே லுசிதன்றென் கூடலொண் டீந்த மிழ்போ, விடையாள் விடலையின் சென்றன ளோவிவ் விருஞ் சுரத்தே" இறை. சூ. ௨௩. மேற்கோள். (இ) "ஆதபத்திரங் குண்டிகை யொருகையி னணைத்துப், போதமுற்றிய தண்டொரு கையினிற் பொலிய, மாதவப்பய னுருவுகொண் டெதிர்வருமாபோ, லீதிவித்தக னடைந்தமை நோக்கின னெடியோன்" கம்ப. மீட்சி. ௧அ௧.

(ஈ) "உறித்தாழ் கரகமு மூன்றுமுக் கோலு முடுத்த செவ்வா, னெறித் தாலனைய விருந்துவ ராடையு மிந்திரவி, மறித்தா லனைய குடையுங் கொண்டேவரு வீரொருவ, னெறித்தாழ் குழல்வல்லி முன்செல்லு மோவிந் நெடுஞ்சுரத்தே" அம்பிகா. ௪௦௦. (உ) "ஒரு வெண் குடையிரு நீழன்முக் கோல்கொண் டொழுக்கத்தினு, லருவெங் களரியைந் தாறுசெல் வீரரு வீரெழுபார், மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையென் வஞ்சியன்னுள், பொருவெஞ் சுடரிலை வேலொரு காளையின் போயினளே" தஞ்சை. ௩௪௧.

௩. (அ) "உறித்தாழ் கரகம்" சிலப். ௩௦, ௬௪, ௯௦. (ஆ) "முறுக்குறி தூங்கு, குண்டிகைத்தடங் கையராய்" திருவிளை. சமணரைக் கழு. ௧அ.

௪. "கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலை கடுப்ப" முல்லை. ௩எ-அ. "நான்மறை நெறிமுக், கோலு மேந்திய குடைகளுங் குண்டிகைக் கரமும்". "இன்ன கொண்ணுவிருடிகள் யாவரு மெய்தி" அரிச்சந்திர. விவாக. ௩-௪.

௫. "குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணீர்" என்பது மாலை இயல் பென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள். தொல். உரி. சூ. ௬௩. 'மாலை' தெய்.

, 8



வெவ்விடைச் செலன்மாலை யொழுக்கத்தீ ரிவ்விடை
யென்மக ளொருத்தியும் பிறண்மக னொருவனுந்
தம்முளே புணர்ந்த * தாமறி புணர்ச்சிய
ரன்னா ரிருவரைக் காணிரோ பெரும

௯ (க) காணே மல்லேங் கண்டனங் கடத்திடை
யாணெழி லண்ணலோ டருஞ்சுர முன்னிய
மாணிழை மடவர † ருயிர்நீர் போறிர்

எ - து: பெருமா! அந்தணீர்! உறியிலே தங்கின கமண்டலத்தையும் அரி அயன் அரனென்னும் மூவரும் ஒருவரென்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த (உ) முக்கோலையும் முறைமைபடத் தோளிலே வைத்து எறித்தலைச் செய்கின்ற(௩)ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குகையினாலே எடுக்கப்பட்ட குடைநிழலிலே, வெவ்விய காட்டிடத்தே போதலை இயல்பாகவுடைய ஒழுக்கத்தினை யுடையீராதலான் உம்மை வினவுகின்றேன்; இக்காட்டிடத்து என்னுடைய மகளொருத்தியும் வேறொருத்தி மகனொருவனும் பிறரறியாமற் றங்களிலே கூடின தாங்கள் இப்பொழுது பிறர் அறிந்த கூட்டத்தினை யுடையராயினர்; அத்தன்மையார் இருவரைக் காணுகிறீரோ? இக்

காட்டிடைக் காணு திருந்தேமல்லேம்; கண்டு அஃதறமென்றே கருதிப் போர்ந்தேம், ஆண்மக்கட்குக் கூறும் அழகினையுடைய தலைவனோடே இவ்வரிய சுரத்தைப் போகக்கருதிப் போந்த மாட்சிமைப்பட்ட அணியினையுடைய மடப்பத்தை யுடையாளுக்குத் தாயார்தன்மையை உடையீர் ‡ போல இருந்தீர்; எ - று.

அரியயனரனென்னும் மூவரையும் ஒருவனாகவல்லது || வெவ்வேறாக நினையாத நெஞ்சத்தாலே ஐம்பொறியும் நமக்கு ஏவல் செய்தலை இயல்பாக வுடைய கோட்பாட்டையும் — நமக்குரிய ஒழுக்கத்தையுமுடைய அந்தணரென்க. குறிப்பு, ஆகுபெயர்.

---

க. 'அறியே மல்லே மறிந்தன மாதோ' ஐங். உசo.

உ. (அ) நியாயப்பிரகாசம். முதற் பரிசேதம் அகூ-அஎ. எண்களின் தலைப்பில் ஏகதண்டி வேதாந்திகனென்றும் திரிதண்டி வேதாந்திகனென்றும் இருவகையார் கூறப்படுகின்றனர். (ஆ) பேராசிரியர், ஒரு கோலுடையார் இருவருளர்; அவர் துறவறத்து நின்றாராதலின் உலகியலின் ஆராயப் படாரென்றும், முக்கோலுடையா ரிருவருட் பிச்சை கொள்வானும் பிறண்டிருந்து தனதுண்பானும் உலகியலின் நீங்காமையின் அவரே கூறப்படுவரென்றும் விளக்குவர்; தொல். மர. சூ. எo.

ங. (அ) "அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்" அற. சங (ஆ) "வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின் மாலை வெண்குடை" (பிரதிபேதம்) * தாமார், † தாயினீர், ‡ போலே, || வேறாக, ÷ உமக்கு.



பெருமாவென்றாள அவாகள் ஆசிரியனாகிய பெரியோனை. அந்தணர் அவன் மாணாக்கர். அவர்களைப் பெருமா அந்தணீரென விளித்தாள்; பெயர்கள் ஒருவனை ஒருவன் ஆற்றப்படுத்த செய்யுளின்மையின் (க) முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி பன்மையொடு முடிந்ததல்லாமையுணர்க.

காணிரோ? குறகின்றது. கணடே மென்னுமற் காணேமல்லேங் கண்டனமென்றதனல். அப்பானம் போகின்றவரை அறிந்து விலக்கல் அற மன்றென்று * பெயர்ந்தேமென்றாராகக் கொள்க. போறிரென்றார், (உ) தேடி வருவாள் செவிலியென்பது உணர்ந்து.

இது தரவு.

கஉ. (ங) பலவறு நறுஞ் (ச) சாந்தம் படுப்பவர்க் † கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே

---

புறம்.கூ0.என்பவைகளும்.(இ)"நின்விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப்பதுவே" எனச சிறப்பித்திருப்பதும்(புறம். நஇ.) பிறவும் ஈண்டு அறிதற்பாலன.

க. முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி ஆற்றுப்படையல்லாத வழியும் பலரில் வழியும் பன்மையொடு போற்றுமற் கூறப்படும் என்பதற்கு 'குறிப்பேவல்......காணீரோ பெரும' என்பது (தொல். எசச. சூ. கூங. 'முன்னிலை') தெய்வசிலையார் காட்டிய மேற்கோள்.

உ. "செவிலிபின் றேடிச சேறலென் றுங்கு" நாற்கவி. சூ. கஅங.

ங. "பலவுறு முத்து" என்பதற்கு, 'பலவிலையுற்ற முத்தென்றுமாம்' என, (பொருந. உஅ.) உரை. எழுதியிருத்தல் ஈண்டு அறியத் தக்கது.

ச. (அ) "கடவரை காதலனேடு கடந்த கயனெடுங்கட், படவர வல்குலும் பாவைக் கிரங்கன்மின்...மலய மென்னுந், தடவரை தானே யணிந்தறி யாதுதண் சந்தனமே." இறை. சூ. உங. மேற்கோள். (ஆ) "சுரும் பிவர் சந்துந் தொடுகடன் முத்தும்வெண் சங்குமெங்கும், விரும்

பினர் பாற்சென்று மெய்க்கணி யாம்.......... கரும்பனமென் மொழி யாருமந் நீர்மையர் காணுநர்க்கே" திருக்சிற். உசஅ. (இ) "தாளம், வவ்வினரிடந்து மவ்வழியான,................பொதியப் பொருப்பு நெடுமுதுகு வருந்திப், பெற்று வளர்த்த கற்புடை யார, மணியுமா மகிழ்நர் பதியுறை புகுதால்.......சென்றுட் குடைந்து, பொன்பதி நீங்கியுளபது மடங்கி, முழங்கப் பெருங்குரல் கூஉய்ப், பழங்க ணெய்தியது பேதைமை யறிவே" கல். உக

(ஈ) "பலவுறு..........நினையுங்கா ணும்மக ளுமக்குமாஙகனையளே" என்பது சுரத்திடைக் கண்டோர் செவிலியர்க்கு அறனுற்றுத்தக உலகியல் புரைத்தற்கு மேற்கோள். தொல். செய். சூ. ககஙி. பே. நச.

(பிரதிபேதம்) * பேர்ந்தேமாக, † அல்லது, (தாழிசை மூன்றிலும்).



வி - து: நறியனபலவுங்கூடும் நறிய * சந்தனம் தங்கண் மெய்ப்படுப் பார்க்குப்பயன்கொடுப்பதல்லது மலையிடத்தேபிறந்தனவாயினும் அச்சந்தனங் கடாம் அம்மலைக்கு என்னபயனைக் கொடுக்கும்? ஆராயுங்காலத்து நம் முடைய † மகளும் பயன்படும் பருவத்து ‡ நமக்குப் பயன்படாள்; எ - று.

கஙு (க) சீர்கெழு வெண் (உ) முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுந்
தேருங்கா லும்மக ளுமக்குமாங் கனையளே

எ - து: தலைமை பொருந்திய வெள்ளிய முத்துக்கள் அணிவார்க்குப் பயன்படுவதல்லது (ங) கடலிடத்தே பிறந்தனவாயினும் அம்முத்தங்கடாம்

---

க. (அ) "சீர்கெழு .... கனையளே" என்பது, கொண்டுதலைக் கழிந்துழி இடைச்சுரத்துக் கண்டோர் செவிலியைத் தடுத்ததற்கும் (தொல். அகத். சூ.சஎ. நச.) (ஆ) பார்ப்பான் கூற்றுக்கும் (தொல். செய். சூ. கஅக. பே. நச்.) (இ) யங்கோர் எதுக் காட்டற்கும். (நாற்கவி. சூ. கஅஅ.) மேற்கோள்.

உ. (அ) "மடவரன் மாதர்க்கு வருந்தா திமோ, கடல்வயிறு பயந்த

நித்திலமுடையோர்க் காத லுலகியல் வழக்கே" ......(ஆ) "வெந்நீ ரருஞ்சுரங் காளைபின் சென்றநும் மெல்லியன்மாட், டிந்நீர்மை யீரிரங் கன்மின் ..............தண்குமரி, முந்நீர் பயந்தா லணிவார் பிறவென்ப முத்தங்களே" (இ) "பெருங்கடன் ஞாலத்துட் பெண்பிறந் தார்தம்பெற் றார்க்குவா. ரிருங்கடல் போற்றுய ரெய் தன்மி னீன்றனை வென்று முந்நீர்க், கருங் கடல் வெண்சங் கணிந் தறியாதண் கதிர் முத்தமே" இறை. சூ. உ௩. மேற்கோள். (ஈ) "வலம்புரி யீன்ற முத்த மணிமிசை யவர்கட் கல்லால், வலம்புரி பயத்தை யெய்தா தினையரே மகளிர்" சீவக. ௧௬௩. (உ) "இற்றுங் கேண்மதி முற்றிழை மகளிர், தந்துநீர்ப் பெருங்கடற் சங்குபொறை யுயிர்த்த, நித்திலத்தன்னர் நினைத்தினை காணென" பெருங். (க) சஎ: உ௫௩-௫. (ஊ) "நாகையின்னே, மீனுர் விழியை யென்னுடி னைவாய்விரி வாரிமுத்தம்,......தாளுகைப் பூண்பவர் ........தாங் கொள்வரோ" குலோத்துங்க சோழன் கோவை. ௩௧௨. (எ) "வேலைத் தரளமும் .................போல நம்மைத் துறந்து மெல்ல, மாலைக் குழலிதனக்குரி யானை மணந்து சென்றாள்" வேங்கைக். ௩௩௩. (ஏ) "மடவா ளொருவ னுடனகன் றாளென்று வாடுகின்றாய்,............ சங்கத் திடையே விளங்கிய முத்தமிழை, யுடனே புணர்ந்து மறிவிலை யோமொழி யொண்ணுதலே" திருவாரூர்க். ௩௧௨. (ஐ) "மையன் மின்னே, தனையீன் றவளை விடுத்தணி வாரிடஞ் சார்ந்திடுமுத், துனையீன் றவளில்லி னியுமுற் றுயில்லை யுன்மகளு. மனையா ளொரு வன்பின் சென்று ளுலகியல் பாயிதுவே" கோடீச்சுரக். ௩௫௨.

௩. "பெருங்கடலுட் பல்விலைய முத்தம்பிறக்கும்" நான்மணி. ௪.

(பிரதிபேதம்) * சந்தனமாங்கண்மெய், † மகள், ‡ அமக்கும்.

அக்கடலுக்கு என்ன பயனைக் கொடுக்கும்? ஆராயுங்காலத்து நம்முடைய மகளும் பயன் படும் பருவத்து நமக்குப் பயன்படாள்; எ - று.

௯அ ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யுஞ்
சூழுங்கா லும்மக ளுமாக்குமாங் கனையளே

எ - து: ஏழுநரம்பாற் கூட்டிய இனிய ஓசைகள் பாடுவார்க்குப் பயன் கொடுத்தலல்லது யாழிடத்தே பிறந்தனவாயினும் அவ்வோசைகடாம் அந்த யாழுக்கு என்னபயனைக் கொடுக்கும்? ஆராயுங் காலத்து நம்முடைய மகளும் பயன்படும் (௧) பருவத்து நமக்குப் பயன்படாள்; எ - று.

இவை மூன்றும், தாழிசை.

எனவாங்கு, அசை.

இது தனிச்சொல்.

௨௨ இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை * வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே

எ - து: ஆதலான் மிக்க கற்பினை யுடையாளுக்கு வருத்தமுறாதே கொள்ளுமின். (௨) இருமுது குரவரிலுஞ் சிறந்த கணவனை வழிபட்டு அவன் பின்னே போனாள். இம்மையில் இங்ஙனம் கற்புப் பூண்டு நிகழ்த்தும் (௩) இவ் வில்லறமே அறங்களிற் றலையான அறம்; மறுமையில் இவ்விருவரும் நீங்காமற் சுவர்க்கத்திலே செல்லும் வழியும் அவ்வழிபாடே; எ - று.

இது சுரிதகம்.

† படரன்மின் ஒருசொல்; படர்மினென்பதன் மறையாதலின்.

அறத்திடத்து நின்று நீங்காதவாறென்று பொருள்கூறின், தலைப்பிரியாவாறெனப் பகரவொற்றுப் பெறுதல்வேண்டும். "ஐகாரவிறுதிப் பெயர் நிலை முன்னர், வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே" (ச) என்றலின்.

க. "கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்று விடைகுடை, யுள்ளத்தான் பெற்ற பெருஞ் செல்வ - மில்லத், துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தா, லேதிலான் முய்க்கப் படும்" நாலடி. உஎச.

உ. (அ) "கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை" நான்மணி. இக. (ஆ) "தங்கணு யகரிற் றெய்வந் தவம் பிறி திலவென் றெண்ணு, மங்கைமார் சிந்தை போலத் தூயது" கம்ப. வேள்வி. கக. (இ) "குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற, புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்" நீதிநெறி. உஎ.

ந. (அ) "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை" குறள்.சக. (ஆ) "இல்லற மல்லது நல்லற மன்று"

ச. தொல். உயிர்மயங்கு. சூ. எஅ.

(பிரதிபேதம்) * யழிபட்டேச், † படாமின் ஒரு சொல்; படுமென்பதன்.



மற்று *வினைமாற்றாய் மறுமையை உணர்த்திற்று. ஆறுமென்ற உம்மை சிறப்பு.

இதனால், செவிலிக்குத் தன்மையென்னும் மெய்ப்பாடு பிறந்தது.

"நாலே கரக முக்கோன் மணையே, யாயுங் காலை யந்தணர்க் குரிய" (க) என்பதனாற் காகமும் முக்கோலும் கூறினர்.

இது பதினோரடித்தரவும் மூன்றடித் தாழிசையும், அசைநிலையாகிய தனிச்சொல்லுஞ் சிறுமைக்கெல்லை கூறாமையின் ஆசிரியத்திற்குக் கூறிய மூன்றடிச் * சிறுமை பெற்ற சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (அ)

(கo) வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்

சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலி
ரு னலவுற்றுக் குடிகூவ வாறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவராற் கோல்கோடி யவனிழ
லுலகுபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம் ;
அ இடைகொண்டு பொருள்வயி னிறத்திநீ யெனக்கேட்பி
னுடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாண்மன்னோ
படைபழை சேக்கையுட் பாயலி னறியாய்நீ
புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டிணைபவள் ;
கஉ முனிவின்றி முயல்பொருட் கிறத்திநீ யெனக்கேட்பிற்
பனியகண் படலொல்லா படர்கூர்கிற் பாண்மன்னோ
நனிகொண்ட சாயலா ணயந்துநீ நகையாகத்
துனிசெய்து நீடினுந் துறப்பஞ்சிக் கலுழ்பவள் ;
கரு பொருணோக்கிப் பிரிந்துநீ போகுதி யெனக்கேட்பின்
மருணோக்க மடிந்தாங்கே மயல்கூர்கிற் பாண்மன்னோ
விருணோக்க மிடையின்றி யீரத்தி னியன்றநின்
னருணோக்க மழியினு மவலங்கொண் டழிபவள் ;
எனவாங்கு ;

---

க. தொல். மரபு. சூ. எo. இசகுத்திரத்து ஆயுக்காலே யென்றதனுல், குடையும் செருப்பு முதலாயினவும் ஒப்பன அறிந்து கொள்கவென்று கூறி 'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழ, லுறித்தாழ்ந்த கரகமு முறைசான்ற முக்கோலும்' என்னும் பகுதியை மேற்கோள் காட்டினர். பே. நச்.

(பிரதிபேதம்) ' றைமையும்.



உக விண்வெஃகி நீசெலின் விடுமிவ ளுயிரெனப்
புணையிழாய் நின்னிலை யான்கூறப் பையென
நிலவுவே னெடுந்தகை நீளிடைச்
செலவொழிந் தனனாற் செறிகநின் வளையே.

இது தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, இவ்வகைப்பட்ட சுரத்தைப் பொருள் காரணமாகப் பிரிகின்றீரெனக் கேட்பின் இவ்வகை யாகற்பாலளெனச் சொல்லிச் செலவழுங்குவித்தமை, தலைமகட்குச் சொல்லியது.

இதன்பொருள்.

(க) வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
(உ) சிறியவன் செல்வம்போற், சேர்ந்தார்க்கு நிழலின்றி

---

க. (அ) "பொருளில்லா னிளமைபோற் புல்லென்றாள்" கலி. நஅ: கரு. (ஆ) "நலனு மிளமையு நல்குரவின் கீழ்சசாம்" நான்மணி.

அ௨. (இ) "பொருளி லொருவற் கிளமையும் போற்று மருளி லொருவற் கறனுக் - தெருளான், றெரிந் தாழ்ந்த நெஞ்சினன் கல்வியு மூன்றும், பரிந் தாலுஞ் செய்யா பயன்" திரிகடுகம். (ஈ) "பொருளுடையான் கண்ணதே போகம்" (உ) "பொருளினா ளுகுமாம் போகம்" சிறுபஞ்ச. ௩, ௩௫. (ஊ) "பொறையிலா வறிவு போகப் புணர்விலா விளமை ... ... .....போலுஞ், சேயிலாச் செல்வமன்றே" வளையாபதி. (எ) "அழகாக்கலும், பொன்றுஞ் சாகத்தினுய் பொருள் செய்யுமே" (ஏ) "கைப்படு பொருளி லாதான் காமம்போற் காளை மீண்டான்" சீவக. ௧௧௨௨, ௨௨௫௧. (ஐ) "நல்கூர்ந்தா ரின்னலமும், பூத்தலிற் பூவாமை நன்று" நீதிநெறி. ௧.

(ஒ) "வறியவ னிளமைபோல்" என்பது ஒருமைப் பொருள் கூறிற்றேனும் பன்மைப்பொருள் உணர்த்தலின் மெய்ந்நிலை மயக்க மாயிற்று; மெய் - பொருள் என்பர். நச. தொல். எச. சூ. ௫௩.

௨. (அ) "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார், கொடுத்துத் தான் றுய்ப்பினு மீண்டுங் காலீண்டும்" (ஆ) "செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தா, ரல்லல் களைபவெனின்" (இ) "அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா, நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப் - பழுமரம்போற், பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே, நல்லாண் மகற்குக்கடன்" நாலடி. ௧௩, ௧௭௦, ௨௦௨. (ஈ) "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான், பெற்றத்தாற் பெற்ற பயன்" (உ) "கொடுத்தலு மின்சொலு மாற்றினடக்கிய, சுற்றத் தாற் சுற்றப்படும்" (ஊ) "பெருங்கொடையான் பேணான்வெகுளி யவனின், மருங்குடையார் மாநிலத்தில்" (எ) "காக்கை கரவா கரைந்



(க) யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப விரி (உ) கதிர் தெறுதலி

துண்ணுமாக்கமு, மன்னநீரார்க்கேயுள" (ஞ) "எதிலாரார்த் தமர்பசிப்பர் பேறைந, பெருஞ்செல்வ முற்றக்கடை" நறள். ௩௨௭ - எ, அரு௭. (ஐ) "அல்ல லொருவர்க் கடைந்தக்கான் மற்றவர்க்கு, நல்லனொகப் ளெனப் படுவோர் - நல்ல, வினைமரபின் மற்றதனை நீக்குமதுவே") (ஓ) "சேர்ந்தா ரொருவரைச் சேர்ந்தொழுகப் பட்டவர், தீர்ந்தாராக் கொண்டு தெளிவிறுந் - தேர்ந்தவர்க்குச், செல்லாமை காணுக்காற் செல்லும்வா யென்னுண்டாம்" (ஔ) "மல்லற் பெருஞ்செல்வ மாண்டவர் பெற்றக்கால், செல்வுழியு மேமாப்பச் செய்பதாம்" (ஓள) "தமக் குற்றதேயாகத் தாமடைந்தார்க் குற்ற, தெமக்குற்ற தென்றுணரா விட்டக் காலென்னும்" பழ.௫ெ. உகரு, உஅக, ௩௬அ. (ஃ) "செல்வத்தைப் பெற்றார் சினங்கடிந்து செவ்வியராய்ப், பல்கிளையும் வாடாமற் பாத்துண்டு - நல்லவார், தான மறவாத தன்மையரே லஃதென்பார், வானகத்து வைப்பதோர் வைப்பு" அறநெறி. எ௬. (அஅ) "அடைந்தவர்க் கருளாஞ்கி னறமென்னு மாண்மை யென்னும்" கம்ப. விபீடண. ௧௪௦. (ஆஜ) "செல்வற் கழகு செழுங்கிளை தாங்குதல்" வெற்றி. (இஇ) "சுற்றநல் கூரவாழுந் தோமுறு சிறியர் போல" நைடதம். மணம்புரி. ௩௫.

க. "தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்று தரலின்றே" என்பதற்கு, உப்பு நீரையுடைய கடலும் உலகத்தே வந்து இனிய நீரைத்தருதல் ஒரு காலத்து மில்லை; என்றது தீயகுணத்தையுடையோர் பிறர்க்கு இனிமை செய்ய அறியா ரென்றவாறு. எனவே கட்டியங்காரன் எக்காலமும் நமக்குத் தீங்கு செய்வனென்றும் இக்குணத்தால் அவனுக்குக் கேடுவிளையு மென்றும் கூறினன். என்று உரைவிரித்து "யார் கண்ணு ..... .. .....தெறுதலின்" என்பதை மேற்கோள்காட்டினர் இவ்வுரைகாரர். சீவக. அ௪அ.

௨. (அ) "கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி, வேத்திய லிழந்தவிய னிலம்போல, வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன், றானலந் திருகத் தன்மையிற் குன்றி, முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும், காலை" சிலப். கக: ௬௦ - ௬௭.

௩. (அ) "நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக், கொடிதோர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு, கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினந் தெறுதலின் ..........மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்" கலி. அ.

## முதலாவது பாலை. ௯ ௬௫

கொலையஞ்சா வினைவராற் கோல் * கோடி யவனிழ்
லுலருபோ லுலறிய வுயர்மர வெஞ்சுரம்

எ - து: பிரமசரியங் காத்தலான் இளமைப் பயன்கொள்ளாது வறியனானவன் இளமைச் செவ்வியின்றி இருக்குமாறுபோலத் தளிர்கள் வாடின கொம்புகளை யுடையவாய்க், கொடுத்தற்கு மனஞ் சிறியனானவனுடைய செல்வம் தன்னைச் † சேர்ந்தவர்களைப் பாதுகாவாதவாறுபோலத் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு நிழலின்றாய், யாவரிடத்தும் உலக ஒழுக்கத்தைக் கடந்து தீங்குசெய்து பின்பு புகழில்லையானவனுடைய முடிவுகாலத்து அவன் கிளையையன்றி அவனுங் கெடுமாறுபோல மரம் சினையையன்றி வேரோடே நின்றுவெம்பும்படியாக ஞாயிற்றினுடைய பரந்த கதிர்கள் சுடுகையினாலே வருத்தமுற்றுக் குடிமக்கள் கூப்பிடும்படி கொலைத்தொழிலுக்கு அஞ்சா அமைச்சராலே நெறியன்றிப் பொருளை வாங்கிக்கொண்டு செங்கோல்வளைந்த அரசனுடைய குடைநிழலிற் றங்கிய * உலகம்போலே உலறின உயர்ந்த ‡ மரங்களையுடைய வெய்ய காட்டை; எ - று.

சினையவாய், நிழலின்றாய், வெம்பவென்க. தெறுகையினாலே உலறிய மரமென்க.

இது தரவு.

அ இடைகொண்டு பொருள்வயி னிறத்திரே யெனக்கேட்பி

னுடைபுநெஞ் சுகவாங்கே யொளியோடற் பாண்மன்னோ

(க) படை || யமை சேக்கையுட் பாயலி னறியாய்நீ

(உ) புடைபெயர்வா யாயினும் புலம்புகொண் டினைபவள்

---

(ஆ) "கொண்மூ, மழைகா லூன்று வளவயல் விளையா...... ..கொடுங்கோல் வேந்தன் காக்குநாடே" ஆசிரிய. (இ) "பகையுடன் கிடந்த நிலைபிரி வழக்கினைப், பொருத்தலும் பிரித்தலும் பொருபகைகாட்டலு, முட்பகை யமைத்தலு முணர்த்துசொற் பொருத்தலு, மொருதொழிற் கிருபகை தீராது வளர்த்தலுஞ், செய்யா வமைச்சுடன் சேரா(?)வரச, னுடைகிரீந்தன்ன காடு" கல். ௩. (ஈ) "மருளேகொண்டு குடிவருந்தமனுநூல் குன்றிவழக்கழியப், பொருளே வெஃகு மரசரைப் போற் புகுவேம் யாமு நரகென்றார்" வில்லி. பதினொராம். போர் ௬௧. (உ) "முற்றுமிருங் குடிகூவப் பொருள்வவ்வி முதுக்குறைவி லுளத்தனுகிக், கற்றவரைத் தண்டித்துக் கல்லாத புல்லருரை கசிந்துகேட்கும், கொற்றவனவ் வுலகுதன தடிப்படுத்திக் கொடுங்கோன்மை புரியு நாளில்"...... .....

க. (அ) 'படையமைசேக்கை' அகம். ௨௮௯ : ௧௨. (ஆ) சிலப். ௧௩ : ௭௦. (இ) "கிடையும் பூளையும் கிழியும் பஞ்சியும், படையமைத் தியற்றிய மடையமைப் பள்ளியுள்" பெருங். (க)௬௩ : ௧௮௯ - ௭.

உ. (அ) "ஒண்டொடி, புழையமாகவு மினையோள், பிழையலண்மாதோ

ரதிபேதம்) * கோடியவனிழல், † சேர்ந்தவர் தம்மைப், ‡ மரங்களுடைய வெம்பகாட்டிடை, || அமைச்சேக்கை.

9

எனவாங்கு

எ - து: என்று யான் கூறுநிற்க ; எ - று.

ஆங்கு, அசை.

உஅ (௪)பேதுற்றாய் போலப் பிறரெவ்வ நீயறியா

‡யாதொன்றும் (௫)வாய்வாளா திறந்தீவாய் கேளினி

(௬)நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்

போதர விட்ட நுமருந் தவறிலர்

---

௧. "மயிர்வார் முன்கை" ஐங்குறு. உ௧அ.

௨. (அ) "குரும்பை மென்முலை" அகம். உ௫௩. உஉ. (ஆ) "குரும்பையக் கொங்கைநாகா கோதையர்" கம்ப. களியாட்டுப். உ. (இ) "குரும்பை மென்முலையார்" நைடதம். நாட்டு. ௧௧. (ஈ) "குரும்பைமுலை வள்ளி" திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் ..... (உ) "குரும்பை போற்கிளர் குவிமுலைக் கௌசியோடு" உத்தரகோச. பாரப்பதிகவும். ௫௧.

௩. "கோங்கரும்பு பந்து கொலைசூது தாளமொக்குள்" இரத்தினச். ௧எ.

௪. (அ) "பேதுறலஞ்சி" அகம். ௪: ௪௧; (ஆ) "பாவை பேதுற" சீவக. ௧௩௯௪; (இ) "பேதுறவு மொழிந்தனள்" (ஈ) "பெரும்பே துற்றதும்" சிலப். ௧உ: ௬௪, ௧௩: ௯௯; (உ) "பெரும்பேதுற்று விளியும்" பெருங். (உ) ௨௦. உஅ.

௫. (அ) "வாய்வாளா தின்றான், செறிநகை" பரி. உ௦: ௪௪ - எ; (ஆ) "வாய்வா ளேனிற்ப" கலி. ௯௫: ௧௫.

௬. (அ) "நீயுந் தவறிலை ........ தவறுடையான்" என்பது சொல்லுவான் குறிப்பினாற் பொருளறிய வந்தமைக்கும் (நன். பெயரியல். சூ. ௧உ.

மயிலே) (ஆ) "நீயுந் தவறிலை ... ... .. தவறிலர்" என்பது இணையும் பாலும்விளங்கவில்லாதசொற்களுள் நீயென்பது குறிப்பாற்பெண்பா லுணாநிற்றற்கும் (தோல். பெயரி. சூ. ௩௧. ௩௪; சூ. ௩௭. 'இன்ன பெயரே' தெய்.) மேற்கோள். (இ) "நீயுந் தவறிலை நின்கை யிதுதந்த,
(பிரதிபேதம்) *வடிவு வரைந்து. † அறியாயோ ஆங்கசை பேதாய். ‡ யாதொன்று மவ ராநிறந்தீவாய,

44J



(௬)நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
(௭)பறையறைந்தல்லது செல்லற்க வென்ன

விறையே தவறுடை யான்

எ-து: *நீ மயக்கமுற்றாய்போலே பிறருடைய வருத்தத்தை அறியாயாய்க் கேட்டார்க்கு‡யாதொன்றுஞ் சொல்லாயாய்க் கழிந்துபோகின்றவளே! இப் பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; நீயும் குற்றமுடையையல்லை; நின்னை இற்புறத்தே புறப்படவிட்ட நம்முடைய சுற்றத்தாரும் குற்றமுடையரல்லர்; குற்றமுடையான் யாவனென்னில்,(௬)நிறையழிக்கொல்கின்ற(௪)யானையை நீர்க்குவிட்டாற் பறைசாற்றிச செல்லுமாறுபோல, பறைசாற்றிச் செல்வ

பூவெழிலுண்க ணவளுந் தவறிலள், வேனிற் புனலன்ன நுந்தையை நோவார் யார், மேனின்று மெள்ளி யிதுவிவன் கைத்தந்தா, டான் யாரோ வென்று வினவிய நோய்ப்பாலேன், யானே தவறுடையேன்" கலி. ௮௪: ௩௬ - ௪௧. (ஈ) "வந்தோன் கொடியனு மல்லன் றந்த, நீதவ றுடையையு மல்லை நின்வயி, னுணை வரும்படர் செய்த, யானே தோழி தவறுடை யேனே" அகம். ௭௨: ௧௧-௨௨.

௬. "நிறையழி யானை நெடுநகூ விளியும்" மணி. ௭: ௬௭.

௨. (அ) "வெரூஉப் பறை நுவலும் பரூஉப் பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" பொருந. கஎக - ௨. (ஆ) "தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி" புறம்: கூ: ந. (இ) "பாகும் பறையும் பருந்தின்பந்தரு,மா துல மாக்களுமலவுற்றுவிளிப்ப" மணி. ச:சக-௨. (ஈ)"பறை நிறை கொல்யானை" (உ)"அறைபறை யானை" முத்தொள். (ஊ) "பறைவன் களிற்றுப்......பாஞ்சாலர்க்கு" வில்லி. சூது. ௨௨௫.

௩. யானைக்கு நிறையுடைமையாவது: "இருநிலனேப்பவிழ்தருகடாத்துக் கைம்மிகக் களித்த கவுள தாயினுஞ், செயிர்கொண் மள்ளர் செரு விடத் தல்ல, துயிர்நகைக் குறுமை" பெருங். (க) ந௮: கக௮ - க௨க.

யானை நிறையழிதல்: "காழோர் கையற மேலோரின்றிப், பாகின் பிண வையிற் பணைமுகந் துடைத்துக், கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும், பீடிகைத் தெருவும் பெருங்கலக்குறுத்து...............பாகும் பறையும் பருந்தின் பந்தரு, மா துல மாக்களு மலவுற்று விளிப்ப, நீல மால்வரை நிலனொடு படர்ந்தெனக், காலவேகங் களிமயக்குற்றென" "நீல யானை மேலோ ரின்றிக், காமர்செங்கை நீட்டிவண்டுடு, பூநாறு கடாஅஞ் செருக்கிக் கால்கிளர்ந்து, நிறையழி தோற்றமொடு தொடர" என (மணி.ச: ந௫-சச, கக: ௨೦-௨ந.) வருவனவற்றால் அறியலாகும்.

௪. "கையது கையோ டொருதுணி கோட்டது, மொய்பிலவேன் மன்னர்முடித்தலை-யைய, வுயர் பொய்கை நீராட்டிச் செல்லுமே யெங் கோன், வயவெம்போர்மாறன் களிறு" தொல். புறத். சூ.கஎ.நச்.மேற். (பிரதிபேதம்) * என்றியான் கூறுவிற்க நீ மயக்க,



லைத் பறைசாற்றுமத் செல்லாதொழிகவென்று சொல்லாத இறைவனே யன்க; எ - று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் அழுகை பிறந்தது.

இது புணர்த நிமித்தமாதலிற் *குறிஞ்சியுட்கோத்தார். இது தான் உயிர்கொடுத்தானாகத் தனது நன்மைகூறி அவள் † நீங்கும் கூறினன்.

இது முன் ஒரு நெடுவெண்பாட்டும் ஓர் அம்போதரங்கமும் தனிச்சொல்லும், ‡ தாழிசையும் பின்னும் ஒரு தனிச்சொல்லும் வெள்ளைச்சுரிதகமும் பெற்றுவந்த கொச்சகக்கலிப்பா. (௨௦)

(ருஎ.)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
மாவென்ற மடநோக்கின் மயிலியற் றளர்பொல்கி
யாய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா விடையின்கட் கண்கவர் பொருங்கோட

வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபங்தோ டிகத்தந்தாய் கேளினி ;

அ பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க
ணேந்துகோட் டெழில்யானை யொன்னுதார்க்கவன்வேலிற்
சேந்துநீ யிணையையா லொத்ததோ சின்மொழி;

௧௨ பொழிபெயல் வண்மையா னசோகந்தண் காவினுட்
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
பணையமை பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்;

*௧௬ வகையமை தண்டாரான் கோடுயர் பொருப்பின்மேற்
றகையிணர் ளேவேங்கை மலரன்ன சுணங்கினாய்
மதவலி மிகுகடாஅத் தவன்யானை மருப்பினுங்
கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை ;

எனவாங்கு;

உக இனையன கூற விறைஞ்சுபு நிலநோக்கி
நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே.

(பிரதிபேதம்)* குரிஞ்சி யுடனே, † நிக்கு கூறினன், ‡ தாழிசையும் வெள்ளைச்



இதுவும் அது.

இதன் பொருள்.

(க)வேயெனத் திரண்டதோள் வெறிகமழ் வணரைம்பான்
(உ)*மாவென்ற மடநோக்கின் †மயிலியற் றளர்பொல்கி
(ரு)யுரய்சிலம் பரியார்ப்ப வவிரொளி யிழையிமைப்பக்
கொடியென மின்னென ‡வணங்கென யாதொன்றுந்
தெரிகல்லா (சு)விடையின்கட் (ஒ)கண்||கவர் பொருங்கோட
÷வளமைசா லுயர்சிறப்பி னுந்தைதொல் வியனக
ரிளமையா னெறிபந்தோ டிகத்தந்தாய் கேளினி

எ-து:(கூ)மூங்கிலென்னும்படி திரண்டதோளினையும்மணம்நாறுகின் றகடை குழன்ற ஐம்பாலினையும் மானைவென்ற மடப்பத்தையுடையநோக்கினையும் மயில்போன்ற சாயலினையுமுடையையாய், அழகிய சிலம்பு உள்ளிமெணி ஆரவாரிப்ப,விளங்குகின்ற ஒளியினையுடையகலன்கள்விளங்க,(எ)நடக்கத்தாற்

க. இச்செய்யுள் உள்ளப்புணர்ச்சியுற்ற தலைமகன் வரைதல்வேண்டிப்

பாங்கற்குரைத்தற்கு மேற்கோள்; தொல். களவு. சூ. எ. இளம்.

௨. (அ) 'மாவென்ற மடநோக்கின்' என்பது வினைபயன் மெய்யுருவென்றவற்றுக்கு உரியனவென்று பாகுபடுத்துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபினான்வரு முவமைசொல்லுக்கு மேற்கோள். தொல். உவமை. சூ. கஎ. இளம். (ஆ) "மானோக்கின்" (இ) "மாதர்கொண் மானோக்கின் மடந்தை" (ஈ) "மானோக்கி" கலி. ௩௦ ௪௦, ௬௬: ௪, அஎ: கக, (உ) "மானேர் நோக்கின் வளைக்கை யாய்ச்சியர்" தண்டி. சூ. கக. மேற்கோள். (ஊ) "மானேர் நோக்கம்" சிலப். எ: ௪௪. (எ) "மானினோக்கி" சீவக. ௩௫௧.

௩. "ஆய்சிலம் பெழுக்தார்ப்ப வஞ்சில வியலுகின்" கலி. ௫௧: எ.

௪. "இடைவனப்பும்" ஏலாதி. எ௫.

௫. (அ) "கண்கவர் காரிகை" இறை. சூ. எ. மேற்கோள். 'பையுண்மாலைப்' (ஆ) "கண்கவர் வனப்பின்" (இ) "கண்ணுங் கவர்ந்திட வனப்புவாய்ந்த, வொண்டொடி" நைடத. அன்னத்தைத்தூது. க௨, போர்புரி. ௫.

௬. (அ) "வேயிற் றிரண்டதோள் வேற்கண்ணாய" பழ. ௩௪. (ஆ) "வேயே திரண்மென்றோள்" (இ) "வேயழுத திரண்டமென்றோள்" சீவக. ௬௫௨. ௨க௨௩. (ஈ) "வேயெனத் திரண்டதோள் விளங்குமேனியாள்" சூளா. கல்யாண. ௨௨௦.

எ. "கொடியென நுடங்கி வேளெனக் கரந்து... .. .. .. .....மின்னெனப் பிறங்குநுண் ணுசுப்பை" காஞ்சிப். மாசாத்தன். க௫.

(பிரதிபேதம்) * மான்வென்ற, † மயிலியலாற்றளா, ‡ அணங்கென வியாதொன்றும், || கவர் பெருங்கோட, கவர்பெழுக தோட ÷ வளைமையாளுபர்.

காடியென்ன (க) விளக்கத்தான் மின்னென்னக் கட்புலனுகாமையின் வருத்தமென்ன யாதொன்றுந்தெரியாத இடையிடத்தே கண்கள்விரும்பிச்

சுரந்தோட, நின்னுடைய இளமைப்பருவத்தாலே செல்வம் அமைந்த உயர்ந்த நிலைமையினையுடைய (உ) நுந்தையுடைய பழமையுடைத்தாகிய அகற்சியை யுடைய மனையினின்றும் அடிக்கின்ற பந்தோடே தளர்ந்து ஒதுங்கிப்புறப் படுதலைச் செய்தவளே! இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று

அ (ஈ)*பூந்தண்டார்ப் புலர்சாந்திற் றென்னவ னுயர்(ச)கூடற்
றேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்க
ணேந்துகோட் டெழில்யானை யொன்னுதார்க் கவன்(ரு)வேலிற்
சேந்துநீ யினையையா லொத்ததோ (௬)சின்மொழி

எ - து சிலவான மொழியினையுடையாய! பூவினையுடைய குளிர்ந்த மாலையினையும் புலர்ந்த சந்தனத்தினையுமுடைய பாண்டியனது உயர்ந்தமதுரை யிடத்துத் தேன்பரக்கும்படி அவிழ்ந்த நீலத்தினது அலரைவென்ற போரை யுடைய கண்கள் தலையாயதின கோட்டையும் அழகினையுமுடைய யானை யினையுடைய பகைவர்க்கு அப்பாண்டியன் வேல் மனம் வருத்துமாறுபோலச்

க. "மின்னென நுடங்கு மருங்குலும்" (தொல். கள. சூ. கக. மேற்கோள் 'கண்ணென்ன') என மின், நுடக்கத்தானும உவமைகூறப்படுமாயினும் கொடிக்கு நுடக்கங் கூறப்பட்டமையின் விளக்கமட்டுமே கூறினர்.

உ. நுந்தையென்பது முறைப்பெயர் இடமும் நகரம் பற்றுக்கோடும் ஆக வரும் மொழிமுதற் குற்றியலுகரச்சொல்லென்பதும இதன் முதலை இதழ்குவியாது குறையக் கூறல்வேண்டுமென்பதும் இதழ் குவித்துக் குறுகாதபடி முற்றக் கூறியவழியும பொருள் வேறுபடாதென்பதும் தொல். மொழி. சூ. ௩௪ - ரு. இள ௩௪; உரைகளால் அறியலாகும்.

௩. "பூந்தண்டார் . . . . சின்மொழி" என்பது முன்னோர் கூறிய

காமககுறிப்பினும் செந்துறைப் பாட்டின்கணவரும் வணணப்பகுதி வரைதலில்லையென்பதற்கு, மேற்கோள். தொல். புறத.சூ. உஉ. 'வழங்கியன்' இளம்.

ச. இந்நூற்பக்கம் உகரு- க - ஆம் குறிப்புப்பார்க்க.

ரு. (அ) "அமுரான் முன்பிற் றன்னைய பேர்திய, வடிவே லெஃகிற் சிவந்த வுண்கண" புறம். ருகுO: அ - க. (ஆ) "அடையார்த் துரந்த வருந்திற லயிலவன், படைத்தலைபெயர்த்த கறையெஃகம் போலக், கடைசிவந் தனவே கருங்கயன் மழைககண்" நாற். சூ. கசஎ. மேற்கோள்; 'வாள்போழ்' (இ) "புலைடலை வேலினுங் கண்சிவப் பார" (ஈ) "வென்றி வேல்போற்சி வந்து" தஞ்சை. கூ௩,'கூஅ.

சு. "சின்மொழி" இந்நூற்பக்கம், கருக கஃஆம் குறிப்புப்பார்க்க, (பிரதிபேதம்) பூததண்டார புலா.



சிவந்து கருத்தஞ்செய்து நீ இத்தன்மையையா யிரா நின்றாய், இத்நீ இளமைக்குத் தக்கதோ ; எ - று.

கண்சேர்திரனையையென்றது, சினைவினை முதலொடுமுடிந்தது

கஉ *பொழி(கு)பெயல் வண்மையா னசோகந்தண் காவினுட
கழிகவி னிளமாவின் றளிரன்ன யதன்றலைப்
பணியைம பாய்மான்றே ரவன்செற்றார் நிறம்பாய்ந்த
கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்

எ - து: பொன்னாற்செய்த குழையினையுடையாய்! பொழிகின்ற பெயல் போலும் கொடையினையுடைய பாண்டியனது அசோகமரத்தினையுடைய குளிர்ந்த பொழிலிடத்துநின்ற மிக்க அழகினையுடைய இளைய (உ)மாவினது தளிரை யொத்த நிறத்தினையுடையையாய் அங்ஙனம் வருத்துதற்கு மேலே பந்தியிலே நிற்றலமைந்த பாய்ந்துசெல்லுங் குதிரைபூண்ட தேரையுடைய பாண்டியனாற் செறப்பட்டவர்கள் மருமத்தே தைத்த அம்பினுங்காட்டில் கோவைச்செய்தல் உலகிற் கொடுமைகளின் மிக்ககொடுமையன்றோ? எ - று.

கசு வகையமை தண்டாரான் கோடியர்(ங)†பொருப்பின்மேற்

றகைமிகு நிற(ச)வேங்கை மலரன்ன சுணங்கினாய்

---

க. (அ) "பெயன்மழைத் தடக்கைப், .. .. .....நல்லியக் கோடனை" சிறுபாண். கஉச - சு. (ஆ) "மழைசுரந் தன்ன வீகை நல்கி" மலை படு. ருஅ௦. (இ) "அவன், வண்கைபோல் வானம் பொழிந்தநீர்" பரி. உஉ: எ - அ. (ஈ) "வானத்தன்ன வண்மையும்" (உ) "மாரியன்ன வண் மைத், தேர்வேளாயை"(ஊ)"வரையா மாபின் மாரிபோல... .பேகன், கொடைமடம் படுதலல்லது" (எ)"மாரி யீகை மறப்போர் மலையனும்" (ஏ) "மாரியன்ன வண்மையிற் சொரிந்து" புறம். ௯ரு: கரு, கஙங: சு-எ, கசஉ: ங - ரு, கருஅ: எ, ஙகூ. கசு. (ஐ) "மாரியி னேற்பார்க் கவைநல்கி" (ஒ) 'மாரிமழை வள்ளல்" சீவக. ஙசுரு, ௯௦௦. (ஓ) "கார்நிகர் வண்கை" நன். சிறப்பு. என்பவைகள் ஈண்டறிதற்பாலன.

உ. (அ) "மாவி, னவிர்தளிர் புரையு மேனியர்" முருகு. கசங - ச, (ஆ) "தேமா மேனி" சிறுபாண். ௬௭கூ. (இ)"மாந்தளிரே மாமேனி" சீவக. சுருஉ. (ஈ) மாவி னிளந்தளி ரன்ன நயத்தகு மேனியும்" (உ) "மாந் தளிர் மேனியுட்"(ஊ)"மாந்தளிர் மேனி"நைடத.அன்னத்தைத். உங.

ங. பொருப்பென்பது பொதியின் மலையின் பெயராதலை இந்நூற்பக்கம் ககரு: க.- ஆம் குறிப்பால் உணர்க.

௯. வேங்கைமலர் சுணங்குக்கு உவமையாதல், "வேங்கைவீ முற்றெழில் கொண்ட சுணங்கணி பூண்கம்" (கலி. ௯௪: ௨௯ - ௭.) என்பதனாலும் அதன்குறிப்பாலும் அறியலாகும்.

(பிரதிபேதம்) * மொழிபெயல் † பரப்பின.

## இரண்டாவது குறிஞ்சி ௨௧. ௬௫௧

தவலி ஈமிகுகடாஅத் தவன்(௩)யானை மருப்பினுங்
(௨)கதவவாற் றக்கதோ காழ்கொண்ட விளமுலை

எ-து: (௩)வகுப்பமைந்தகுளிர்ந்ததாரினையுடையபாண்டியனது(௪)சிகரீங் ஞயர்ந்த (௫)பொதியின்மலையிடத்து அழகினையுடையகொந்துக்களையுடைய இளைய வேங்கைப்பூவையொத்த சுணங்கினையுடையாய்! முத்துவடத்தைத் தன்னிடத்தேகொண்ட நின்னுடைய இளையமுலைகள் இப்பருவத்திலும் அப் பாண்டியனுடைய மிகுதியையுடைய வலியினையும் மிகுகின்ற கடாத்தினையு முடையயானையினுடையகொம்புகளிலுங்கோபத்தினையுடைய வாயிராநின்றன, இக்கொடுமை இப்பருவத்திற்குத் தக்கதோ ? எ - று.

எனவாங்கு

எ-து: என்று; எ-று. ஆங்கு அசை.

௨௧ இனையன கூற விறைஞ்சுபு †நிலநோக்கி
‡நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போன் மற்றங்கே
துணையமை தோழியர்க் காத்த கண்ணள்
மனைபாக்குப் பெயர்ந்தா(௫)ளென் னறிவகப் படுத்தே

க. (அ) "கொடுங்கே ழிரும்புற நடுக்கக் குத்திப், புலிவிளை யாடிய புலவு நாறு வேழத் தின், றலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்தநின், கண்ணே கதவ வல்ல" நற். நகூ: சு-எ. (ஆ) "கொடியனவாங்கொலை யானையின் கோடு" தஞ்சை. கூஅ.

உ. (அ) கதத்தினையுடைய வென்னும் பொருளில் 'கதவ' என அஃறிணைப் பன்மைவினைக்குறிப்பு வகர வீற்றுன்வந்ததற்கு, "கதவவாற் றக்கதோ காழ்கொண்டவிளமுலை" என்பது மேற்கோள்; தொல்: வினை. சூ. உசு. கல். நச. (ஆ) "தொடலை தைஇய மடவரன் மகளே, கண்ணினுங் கதவநின்முலையே" ஐங். நகூக.(இ)"கண்ணே கதவவல்ல"நற்.நகூ:எ.

ந. (அ) "வகைத்தார் மார்பன்" பெருங். (௪) ௪: அ (ஆ) "முறிமிடை படலைமாலை" - 'வகைமாலை' சீவக. கஅஅக. (இ) "பூவார் முறிமிடை படலைமாலை" சூளா. துறவு. உந என்பவைகள் இங்கே ஒப்புநோக்கற் பாலன.

௪. (அ) "எற்றரு நெடுஞ்சிமைப், புகலரும் பொதியில்" அகம். நஉஉ: கரு - ௪. (ஆ) "ஓங்குயர் மலையத்து" மணி. க ந. (இ) கோடுயரடுக்கத்து" தமிழ்நெறி. மேற்கோள்.

ரு. (அ) "பொதியில், வேங்கையுங் காந்தளு நாறி" குறுந். அ௪ (ஆ) "அடுக்கத்த, விடர்வரை யெரிவேங்கை யிணர்" கலி. ௪ரு: கசு-எ.

௬. "என்பால, வென்னைவிட்டிகத்தர விறந்தீவாய்" கலி. ருக: அ - கூ.

(பிரதிபேதம்) *தமழ்கடா அத்தயன். † நிலநோக்கி ‡ நினைகுடி, நினைவள.



எ-து: *இத்தன்மையனவற்றை யான் நெடிதொன் றநினையாநின் று கூ அதற்கு ஒன் று கூறாதே கவிழ்ந்து நிலத்தைப்பார்த்துப் பின்னை அவ்விடத் தோழியரை நினைப்பாள்போலே துணையாயமைந்த தோழியர்க்குப்பொருந்தி கண்ணையுடையளாய் என் அறிவைத் தன்னிடத்தே அகப்படுத்திக்கொண் †தன்மனையிடத்தே மீண்டுபோனாள்; எ - று.

இஃது ஏமஞ்சாலாவிடும்பையெய்திக் கூறினது.

நெடிதோன்று நினையாநின்றென்றது தான் சிறிதுநாட் சென்று வரைந்துகோடலை நினையாநின்றென்றதாகக்கொள்க. நினைப்பாள்போலெ றதனால் அவன் கூற்றினையும் இதுவுமொன்றெனச் சிறிதுகொண்டமையு தோன்றிற்று.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

‡இஃது ஏழடித்தரவும் நான்கடித்தாழிசையுந் தனிச்சொல்லும்நான்கடிச சுரிதகமும்பெற்ற ஒத்தாழிசைக்கலிப்பா. (உச)

(ரு௩) வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்
காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை
யாருயிர் வெளவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்;

ஏ உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக
விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்
களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லெனபாய்;

கக நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு
மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்;

கரு அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு

மொல்லேயே யுயிர்வெளவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வததாற் போத்தந்த நமர்தவ றில்லென்பாய்;

எனவாங்கு;

(பிரதிபேதம்: * என்றிதன்மையன † தன்னிடத்தே மீண்டுபோறு னெவேமஞ்சாலா விம்பை யெயதிக்கூறினன். நெடி ‡இது எழுடி.

## இரண்டாவது குறிஞ்சி உ௨. ௩௫௩.

ஒறுப்பின்யா னொறுப்பது நமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்
மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே.

இதுவும் அது.

### இதன் பொருள்.

(௧) வாருறு (௨)வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்
பேரெழின் மலருண்கட் (௩)பிணையெழின் மானோக்கிற்
(௪)*காரொலிர் தளிர்மேனிக் கவின்பெறு †சுடர்நுதற்
கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்
நேர்சிலம் பரியார்ப்ப ‡நிரைதொடிக்கை வீசினை
யாருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்

எ-து: கோதுதலுற்றகடைகுழன்ற(௫)ஐம்பாலினையும்வளைந்தஇறையினையுடைய நெடிய மெல்லிய தோளினையும் பெரிய அழகினையுடைய ||மலர் போலுங் கண்ணினையும் மான்பிணையினது அழகினையுடைய வெருவின நோக்குப்போலும் நோக்கினையும் மழையைப்பெற்ற தளிர்போலும் நிறத்தினையும் அழகுபெறுகின்ற பிறைபோன்ற நுதலினையும் (௬) விழுந்தெழுந்த கூரிய

க. "வாருறு வணர்கதுப் புளரி" குறுந். அஉ.

உ. (அ) "வணரைம்பால்" கலி. ௬ள: க. (ஆ) "வணர்சுரி யைம்பாலோய்" சிலப். எ: ௩க.

௩. (அ) "பிணையெழின் மானோக்கின்" (கலி. உஎ: ௩) என்பதும் அதன் குறிப்பும்(ஆ) "மான்பிணையன்ன மகிழ்மடநோக்கே"(புறம்.௩௱௪௰.) என்பதும் ஈண்டறிதற்பாலன.

௪. "தளிபொழி தளிரன்ன வெழின்மேனி" கலி. க௩: கக.

௫. (அ) "செய்யிடை நீவி மணியொளி விட்டன்ன, வைவளை பாராட்டி னும்மற்றெங் கூந்தற், செய்வினை பாராட் டினையோ வைய" (ஆ) "இளையவ ரைம்பால் போல்" கலி. உ௨: க௨-௪, உக: ௬.

௬. (அ) "போழுறு பகுவாயிற் பொலிதரு மெயிறேமும், வீழுறுநகையாலும் விரிதரு தியினாலும், தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ, ஆழுற வமர்செவ்வா னொத்ததவ் வுழியன்றே" கந்த. முதனாட்பானு. ௪௪அ.

(பிரதிபேதம்) * காரெறி ரொளிர்மேனி, † பிறைநுதற், † நிரைதொடி வீசினை, || மலர்போலும் அழகிய மான்போலும் கண்ணையும் மேகமறைத்தலாற் சுடரெறிர்தோன்று மிக்கிரதநப்போலும் அழகிய நுதலினையும் வெள்ளிய பல்லினையுமுடைய.





வயிற்றினையும் விழுந்தெழாத முகைபோலும் வெள்ளிய பல்லினையுமுடை கொடியையொக்கும் இடையினையுடையாய்! காலுக்குப்பொருந்தினசிலம்பு ஒள்ளியமேனி ஆரவாரிப்ப நிரைத்த தொடியையுடைய கையை வீசி யாய்ப் பெறுதற்கரிய என்னுயிரைக்கொண்டு இளமையாற் கைக்கொண்டது அறியாதே போகின்றவளே! யான் கூறுகின்றதனைக் கேள்; எ - று.

எ (க)உளனுவென் னுயிரையுண் (உ)டுயவுநோய் * கைம்மிக
விளமையா னுணரா தாய் நின்றவ நில்லானுங்

கனைநரி னேய்செய்யுங் கவின றிந் தணிந்துதம்
வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்

எ-து: வருத்தத்தினையுடைய(ங)காமநோய்கைம்மிகும்படியாகயான்சிறிது உயிருடனே இருக்கும்படி என்னுயிரை வாங்கிக்கொண்டு நின் இளமைப பருவத்தாலே அறியாமற் போகின்றவளே! நின்னிடத்துத் தப்பில்லையாயினும் (ச)நின்னையொழியப் போக்குவார் பிறர் இல்லாத நோயைசசெய்யும் அழகை யறிந்துவைத்தும் அதன்மேலே (ரு) ஒப்பித்துத் தஞ் செல்வசசெருக்காலே புறப்படவிட்ட நம்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலா மாகிற் கூறு; †அஃது அரிது;' எ - று.

கக நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்
மடமையா னுணரா தாய் நின்றவ றில்லானு

(ஆ) "மூளையெயிறு நிரம்பா விளமைப் பருவத்து" தமிழ்நெறி. மேற் கோள். (இ)"முன்ப லரும்பிய பாலுறு செவ்வாய்ப், புன்றலை மகாஅர்" ஆசிரியமாலை.

க. (அ) "உண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல், பெண ணன்று" கலி. சு0: சு - எ. (ஆ) "இலனென்று தீயவை செய்யற்க" (குறள்.உ0ரு) என்புழி இலன்என்பதில் அன் விகுதி தனித்தன்மையில் வந்ததென்பதற்கு, "உளனுவென் னுயிரையுண்டு" என்பதை மேற் கோள் காட்டினர்; பரிமேலழகர்.

உ. (அ) "உயவுநோய்க் குயிர்ப்பாகி" (ஆ) "உயவுநோய்க் குய்யுமா றுரைத்துசசெல்"கலி. ரு௯. உஉ, ககங: ங. (இ) "உயாவே யுயங்கல்" தொல். உரி. சூ. எக.

ங. "காமங் கைம்மிகிற் றாங்குத லெளிதோ"

௪. (அ) "நின்முகந் தான்பெறி னல்லது கொன்னே, மருந்து பிறிதி யாது மில்லேல்" கலி. ௬0: ௨௦ - ௨௧. (ஆ) "பிணிக்கு மருந்து பிறம னணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து" குறள். ௧௧0௨.

௫. ஒப்பித்தல் - அலங்கரித்தல்.

(பிரதிபேதம்) * கைமிக, † அதஉ அரிது (தாழிசை மூன்றிலுரையிலும்).

## இரண்டாவது குறிஞ்சி ௨௨. ௫௫

(௧)மிடைகில்லா தெய்த்தநின் னுருவறிந் தணிந்துதம்
முடைமையாற் போத்தந்த நமர்தவ றில்லென்பாய்.

எ - து: (௨)அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஒழுக்கந் தேய்ந்து ...தலே எனக்கு உறுத்தி நாடோறும் என்னை நலிதற்குக் காரணமான நீ ...ய்த நோயை நினது மடப்பத்தாலே அறியாமற் போகின்றவளே! நின் னிடத்துத் தப்பில்லையாயினும் நிற்கமாட்டாதே இளைக்கும் இடையையுடைய நின் வடிவை அறிந்துவைத்தும அதன்மேலே ஒப்பித்துத் தஞ்செல்வச்செருக் காலே புறப்படவிட்ட நம்முடையசுற்றத்தாரைத தவறுடையரல்லரென்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது; எ - று.

௧௫ அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யடருநோய்
சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானும்
பொலங்கேழ வுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்
செல்வத்தாற் போத்தந்த நமர்தவ றில்லென்பாய்

எ - து நெஞ்சழிந்து வருத்தமிகும்படி கெடும்படி வருத்தமாகி மேன் மேலும் அடர்ந்துவருகின்றகாமநோயைக் குறிப்பான் † அறிதலன்றிசசொல்லிக

காட்டினும் அறியாதவளே! நின்னிடத்து நுடப்பில்லையாயினும் ஒழுக உயிரைவாங்காது விரைய உயிரைவாங்கும் நின் வடிவை அறிந்துவைத்தும் அதற்குமேலே ஒப்பித்துவைத்தும் தஞ் செல்வச்செருக்காலே புறப்படவிட்ட நும்முடைய சுற்றத்தாரைத் தவறுடையரல்லரென்று கூறலாமாயிற் கூறு; அஃது அரிது ; எ - று.

ஆயினும், ஆனுமெனக் குறைந்து‡நின்றது. அழிபுகவென்றும் பாடம். மாலொங்கு, அசை.

௨௦ ஓஒறுப்பின்யா னொறுப்பது நூலறையான் மற்றிந்நோய்
(௩)பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற்(௪) பொலங்குழாய்

---

௧. "பிணையேர்மடநோக்குநாணுமுடையாட், கணியெவனோ வேதிலதந்து" (குறள். ௧௦௮௯.) என்பதற்கு, பரிமேல் எழுதிய உரையும், 'இவட்குப் பாரமாதலும் எனக்கு அணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம்' என்னும்விசேடவுரையும் இங்கே அறிதற்பாலன.

௨. அறிவு முதலியவற்றின் பொருள், இந்நூலிறுதியிலுள்ள அகராதியில் விளக்கப்பெறும்.

௩. (அ) "பொறைநில்லா நோயோடு" (ஆ) "உரிதென் வரைத்தன்றி யொள்ளிழை தந்த, பரிசழி பைதனோய்" கலி. ௩ : ௪; ௧௩௮: ௨௦ - ௨௧.

௪. "பொன்னெனன் கிளவி" (தொல். புள்ளி. சூ. ௬௧) என்னும் சூத்திரமும் அதற்கு இளம். நச. எழுதியுள்ள உரையும் நோக்குக.

(பிரதிபேதம்) * நின்னையறிந்து, † அறிதலின்றி ‡ நின்றது எனவாங்கு ஆக்கலர் ஒறுப்பின.

புறத்திவ்வூர் மன்றத்து மடலேறி
நிறக்குவென் போல்வல்யா னீபடு பழியே

எ - து: யான் ஒறுத்தக்கூறில் ஒறுப்பது புறத்துப்போதவிட்ட மூடைய சுற்றத்தாரை; நின்னையன்று; பின்னை இக்காமநோய் பொறுக்கலா அளவையுண்டத்தன்றி மிகுமாயிற் பொன்னாற்செய்த குழையினையுடையா யான் இங்ஙனம் வருந்துகின்றநிலைமையைப் போக்கி இவ்வூரின் மன்றத்திலே கண்ணே மடலேறி நீ எய்துவதொரு பழியை யான் உனக்கு நிறுத்துவேன் போலே இராநின்றேன், நீ அதனை *அறி; எ - று.

இது சொல்லெதிர்பெறாஅன் சொல்லியின்புற்றது.(க)

அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளொடு தீங்கைப் புணர்த்தும் தான் ஏதஞ்செய்யாது உயிர்கொடுத்தானைத் தன்னொடு நன்மையைப் புணர்த்தும் கூறியவாறு காண்க.

அவன் இங்ஙனம் மிகுதி கூறுவான், மடலேறுவேன் போல்வலென ஐயுற்றுக்கூறினன்.

இதனால், தலைவற்கு அசைவென்னும் உவகை பிறந்தது.

†இஃது ஆறடித்தரவும், நான்கடித்தாழிசையும் பொருள்பெறாத தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (உஉ)

(௫௬.) தளிநெகிழ் பிணிநிவந்த பாசடைத் தாமரை

முளைநிமிர் தவைபோலு முந்துக்கோ லவிர்தொடி
யடுக்கலா றலர்காந்த ளுண்ணோர்தண் ணேருருவிற்
றுடுப்பெனப் புரையுநின் றிரண்டநே ரரிமுன்கைச்

௫ சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த வழகமை புனைவினை
யாய்சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுநின்

பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்திவாய் கேளினி;

---

க. தோல். அகத். சூ. ௩௦. இசஞுத்திர வுரையில் இப்பாடலை மேற்கோள் காட்டி, தான் உயிர்கொடுத்தானுகத் தனது நன்மை கூறி, அவளது தீங்கெல்லாங் கூறுவான் மடலேறுவேன் போலுமென்று ஐயுற்றுக் கூறியவாறு காண்க. அவளைச்சொல்லுதலே தனக்கு இன்பமாதலிற் "சொல்லியின்புறல்"என்றார். என்பர். நச்.இ-வி. உரைகாரரும் இ-வி. ௰அக-ஆம் சூத்திரவுரையில் இதனை மேற்கோள்காட்டி இறுதி வாக்கியத்தை எழுதினர்.

(பிரதிபேதம்) * அறியெனச் சொல்லெதிர் பெருன் சொல்லி யின்புற்குன் அவளும். † இது ஓத்தாழிசைக்கலி.

## இரண்டாவது குறிஞ்சி உ௩. நகுள

மருளியான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ;

௺ உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்காற்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய பலர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ;

கஅ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ

நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ;

எனவாங்கு;

௨௩. அனையவை யுளையவும் யானினக் குரைத்ததை
யினையநீ செய்தது வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது
நயம்பற்று விடனில்லை நசைஇயோர் திறத்தே

இஃது இரந்துகுறையுற்றுப் பின்னின்ற தலைவன் ஆற்றனாய்த் தலைவியைநோக்கி இங்ஙனம் வருத்துவையாயின் நீ செய் தவம் இன்றமெனக் கூறியது.

## இதன் பொருள்.

தளைநெகிழ் பிணிநிவந்த பாசடைத் (௧)தாமரை
முளை*நிமிர்ந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி
(௨)யடுக்கநா றலர்காந்த †ணுண்ணேர் தண் ணேருருவிற்
(௩)றுடுப்பெனப் புரையுநின் றிரண்டமே னரிமுன்கைச்

---

௧. "தாமரை, முளைநிவந் தவைபோலு முத்துக்கோ லவிர்தொடி." என்பதை, குறிப்பு மொழியுள் விகாரத்திற்கு மேற்கோள் காட்டி, கோலமென்பது கோலெனக் கடைக்குறைந்து வந்ததென்பர். மயிலைநாதர்; நன். பெயர். சூ. ௧௨.

௨. (அ) "சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்" குறுந். ௨௩௯. (ஆ) "நறுந்தண் சிலம்பி னறுகுலைக் காந்தள்" ஐங். ௨௨௬.

௩. (அ) "துடுப்பெனப் ... ........விளையாட" என்பது, ஒரு வேற்றுமை யுருபு தொடர்ந்தடுத்துவந்த சொற்கள் ஒரு முடிக்குஞ் சொல்லாற்

(பிரதிபேதம்) * நிவந்தவை. †தண்ணே ரேருருவிற்.

ரு சுடர்விரி * வினைவாய்ந்த (க) தூதையும் பாவையும்
விளையாட வரிப்பெய்த வழகமை புனைவினை
(௨)யாய்†சிலம் பெழுந்தார்ப்ப வஞ்சில வியலுங்நின்
பின்னுவிட் டிருளிய வைம்பால்கண் டென்பால
வென்னைவிட் டிகத்தர விறந்தீவாய் கேளினி

எ - து: ‡முறுக்கு அவிழ்ந்ததும் அரும்புகள் நீருக்குமேலேதூக்கின பசிய இலையினையுடையதுமான தாமரையினது வளையம் வளர்ந்தவையிற்றை யொக்கும் (ங) முத்தை அழுத்திச்செய்த இரட்சிலையையுடைய விளங்குகின்ற தொடியினையுடைய, அடுக்கமெல்லாம் நாறுகின்ற கூரிய அழகினையுடைத் தாகிய அலர்களையுடைய காந்தளினது குளிர்ந்த (ச)எழுசசியையுடைத்தாகிய வடிவினையுடைய துடுப்பென்று கூறும்படியாக ஒக்குந் திரண்ட தம்மில் இணையொத்த மெல்லிய முன்கையினுலே(ரு)இங்குலிகம் எழுதின ஒளிவிரிந்த

முடிந்ததற்கு மேற்; தோல். வேற் - மயங. சூ. கக. நச. (ஆ)"காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன, செறிதொடி முன்கை" பட். கருங - ச. (இ)"காந்த ணறுங்குலை யன்ன, நலம்பெறு கையினென் கணபுதைத் தோயே" ஐங். உகந. (ஈ) "கைபோர் பூத்த கமழ்குலைக் காந்தள்" பரி. கக: எசு.(உ)"பைந்துடுப் பெடுத்த வலம்குருலைக் காந்த, ளணிமலா நறுந்தாது தூந் தும்பி, கையாடு வட்டிற் றோன்று, மையாடு சென்னிய மலைகிழ வோனே" அகம். கoஅ: கரு - கஅ. (ஊ)"காம்பமை இலம்பிற கடிநாட் காந்தட், பூந்துடுப் பன்ன முன்கையின்" (எ) "காநதட், பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை" பெருங். (௨) கரு: எங - ச; (ச) கக: எஅ - க. (ஏ) "கைவிரிந்தன காந்தளும்" சூளா. நாடு. கக.
க. "மண்டேதை யாக்கிய சோதீந் திட மகிழ்ந்தார்" மறைசையந். உரு.

உ. "இன்மணிச் சிலம்பிற் சின்மொழி யையபாற், பின்னெடு செறீஇய தடவரா" கலி. கஉ௫: கக-எ

௩. (அ) "கைக்குவான்முத்தின் சரிவளை பெய்து" திருவாரூர்த்திருவிசைப்பா. க. (ஆ) "துணிகதிர் முத்திற் செயத வங்கதந் தோளிற்பூட்டி" (இ) "நிலவுமிழ் மணியிற் செய்த வங்கத நெடுந்தோள் சாத்தி" காஞ்சி. திருமண. ௩௬, ௪அ.

௪. "ஏராவது எழுச்சி; அது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்துநிற்கும்" என்பது (தொல். பொருளி. சூ. ௫௩. ௩௪.) ஈண்டும் நோக்கற்பாலது.

௫. இங்குலிகம் - சாதிலிங்கம்.

(பிரதிபேதம்) [1] வரியாயதத, வரியாய. † சிலம்பரி யாாபப யருசெலவியலுள், சிலம்பரி பெரூநதாப்ப. ‡ தலைசெறிழ தாமரை முறுச்சவிழநத தாமரை, பிணிவிவாத பாசடைத்தாமரை - அரும்புகள ீருககுமேலே யோஙகின பசிய வில்லியின யுடைய தாமரை; தாமரைவளையம் வளாநத.

## இரண்டாவது குறிஞ்சி உ௩. ௩.௫௬

...தொழில்களையுடையவாகிய வாய்களையுடைய மரத்தாற்செய்த சிறுபானை ...ாலும் பாவையாலும் விளையாடுதற்கு, உள்ளிடுமணியிட்ட அழகமைந்த அழுந்த தொழில்களையுடைய அழகிய சிலம்புகள் மிக ஆரவாரிப்ப அழகினையுடைய ...அடியிடாநடக்கும் நின்னுடைய இளமை நீங்குதலாற் பின்னுதல் வீட்டு ...ருண்ட ஐம்பாலைக்கண்டு என்னிடத்துண்டாகிய(௬) அறிவுமுதலியனஎன்னை ...டுப் போம்படியாகப் போகின்றவளே! யான் கூறுகின்றதனை இப்பொழுது ...ள்; எ - று.

தளைநெகிழ்தாமரை, பிணிநிவந்தபாசடைத்தாமரையென்க.

மருளி(௨)யான் மருளுற விவனுற்ற தெவனென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
(h)தையினீ ராடிய தவந்தலைப் படுவாயோ

எ - து: யான் மயக்கமுறுகையினாலே அதுகண்டு தானும மருண்டு இவளுற்ற நோய் யாதுதானென்று கேட்கும் அருள் இவட்கு இல்லை யென்று யான் ‡கூற, அதுகேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவிற் கூரிய

௧. "மனையாங்குப் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே" கலி. ௫௭: ௨௪.

௨. "ஆருயிர் யாதெதான் றிடருறு மாங்கதற், கோருயிர் போல வுருகி யுயக் கொள்ள, நேரின துமுடி யாதெனி னெஞ்சகத், தீர முடைமை யருளி னியல்பே" சூளா. துறவு. ௧௭௦.

௩. நீராடலும் தவமென்பது (அ) "நீஇ ராடல்...... ......எற்ற தவத்தி னியல்பென மொழிப" (தொல். புறத்திணையியல். சூ.௨௦. மேற்.) (ஆ) "தவாநதி போகு மருமறைத்தாபதர்" கல் ௬: ௧௧. (இ) "சங்கையி னதி கண முற்று மாடிய தவத்தின் பேறும்" திருவிளை. தலவிசேடப். ௧௧. என்பவற்றால் அறியலாகும். (ஈ) "தையினீராடுதல் மகளிர்க்கு உரிய தென்பது, "இன்று இவ்வூரரெல்லாந் தைந்நீராடுப" என்பது உயர் திணைக்கண் தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகுசொல்லுக்கும் (தொல். கிளவி. சூ. ௫௦. இள;) உயர்திணை ஆணொழி வினைக்கும் (நன் பொது. சூ. ௧. மயிலை) (உ) "இவ்வூர்மகளெல்லாம் தைந்நீராடினர்" என்பது பெண்பாலென வினையினாற்பொருள்விளங்கிற்றென்பதற்கும் (தொல்.

கிளவி. சூ. ௩௧. 'அவற்றுள் வினைவேறு' தெய்.) (ஊ) "இன்று இச் சேரியார் தைந்நீராவேர்" என்பது உயர்திணையிடத்துத் தொழிலிற் ரேன்றும் ஆனொழி மிகுசொல்லுக்கும் (நேமி. சொல். ௧௧. உரை) (எ) "மருவூரார் தைநீராடினார்" என்பது வினைச்சொல் உயர்திணை ஆணையொழித்து வந்ததற்கும் (நன். பெயரி. சூ. ௬௨. மயிலே.) மேற் கோள்களாகக் காட்டப்பெற்றிருத்தலால் விளங்கும். அவருள்ளும்

(பிரதிபேதம்)* சிலம்புமிக் காரவாரிப்ப, சிலம்புகள் மிககாரவாரிப்ப, † கேள். மருளியான், ‡ கூறுவது கேட்டவயலார்,

௩௬௦ கலித்தொகை ௫௯.

எயிற்றினையுடைய இளையமகளிர்க்கு நடுவே வகுப்புடைய கோலத்தாலே பொலிவுபெற்று நீ தைத்திங்களில் நீராடிய(௧) நோன்பின் பயனைப் பெறுவை யோ? பெறாய்காண்; எ - று.

௧௭ உருளிழா யொளிவாட விவனுண்ணோ யாதென்னு
மருளிலை யிவட்கென வயலார்நிற் பழிக்குங்கால்
பொய்தல மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ
யெய்திய *பலர்க்கீத்த பயர்பபக் கிற்பதோ

எ - து: தலையிற் கிடந்து அசையுந் (௨) தலைப்பாளையையுடையவனே! ஒளிகெடும்படி இவன்மனத்தில் உண்டாகிய நோய் யாதென்று கேட்கும் அருள் இவட்கு இல்லையென்று யான்†கூற அது கேட்டு அயலார் நின்னைப் பழிக்குமளவில் நோன்பாகிய விளையாட்டினையுடைய மகளாந்தன்மையை யுடையையாய்ப் பிறர் மனையின்கண்ணே ஐயமேற்றுப் பாடி நீ ஆண்டுப் பெற்ற வையிற்றைப் பிறர்க்குக் கொடுத்ததனாலுள்ள பயன் நினக்குப் பயன் தருவதொன்றோ? தாராதுகாண; எ - று.

பொய்தல, அகரஞ் செய்யுள் விகாரம்.

கஅ ஆய்தொடி யைதுயிர்த் திவனுண்ணோ யாதென்னு
நோயிலை யிவட்கென நொதுமலர் பழிக்குங்காற்
(ஈ)சிறுமுத்த னைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
‡கறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ

எ-து: ஆராய்ந்திட்ட தொடியினையுடையாய்! நீதான் ஐதாக உயிர்த்து இவன்மனத்திலுண்டாகிய நோய் யாதென்று கேட்கும் நோய் இவட்கு இல்லையென்று யான் || கூற அதுகேட்டு அயலார் நின்னைப்பழிக்குமளவிற் சிறிய

---

கன்னியர்க்கே உரியதென்பதை, (ஏ) "நறுவீ யைம்பான் மகளிராடு, தைஇத் தண்கயம் போலப், பலர்படிந்து" (ஐங். அச.) (ஐ) "தாயருகா நின்று தவத்தைந்நீ ராடுதல்" (பரி.கக.கக.) என்பவை வலியுறுத்தும்.

க. நோன்பின் பயன், சிறந்தவனைக் கணவனாகப் பெறுதலென்ப.

உ. "நடுச்சிகை முத்துத்தாமம்" (சீவக. உளஙக) என்பதற்கு, 'சிகைநடுவிற் றலைப்பாளை' என்று இவ்வுரையாசிரியரும் "தொய்யகம்" (சிலப். சு: கoஎ.) என்பதற்கு, 'தலைப்பாளை' என்று அரும்பத வுரையாசிரியரும் 'பூரப்பாளை' என்று அடியார்க்கு நல்லாரும் எழுதியிருப்பவை இங்கே அறிதற்பாலன.

ங. "குறுநிலக் கோமா னந்த, முத்தனை யன்றிப் பின்னை யாரையே முதன்மை செய்தான்" வில்லி. சூதுபோர். கச.

(பாதிபேதம்) * பலர்க்கியைத்த, † கூறுவது கேட்டு அயலார், ‡ கறுநுதலவரொடு நக்கன்கு || கூறுவதுகேட்டு அயலார்.

மகளைப் பேணி வளர்த்து அவனுக்கு வேறொருத்தியுடைய (க) * பெண்ணைக் கோடற்குச் சிறுசோற்றைச் சமைத்து ஆயத்திற்கு இட்டு நீ நறிய நுதலையுடைய மகளிரோடே மகிழ்ந்த கோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ ? பொருந்தாது †காண்; எ – று.

எனவாங்கு

எ–து: என்று; எ–று. ஆங்கு, அசை.

உ௩. அனையவை (உ.)யுளையவும் யானினக் குரைத்ததை
‡யினையநீ செய்ததுத வாயாயிற் சேயிழாய்
செய்ததன் பயம்பற்று விடாது
‖நயம்பற்று விடினில்லை நசைஇயோர் திறத்தே

எ – து: ÷நீ நெஞ்சுளையவும் யான் நினக்குக்கூறியது சேயிழாய்! நின்னை நசசினோர் திறத்தே வருந்தும்படி நீ செய்த கொடுமைக்கு நீ ஓர் உதவிசெய்யாயாயின் நீ செய்த (௩.)அத்தீங்கினுலுள்ள பயன் நின்னைப் பற்றுதல் விடாது,

---

க. இச்சொல், "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தொல். பெயரி. சூ. க, க0) என்றும் "மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி" (தொல். பெயரி. சூ. ௪0) என்றும் ஆசிரியரால் வழங்கப்பெறுதலும் "பெண்மையடுத்த மகனென் கிளவி" (தொல். பெயரி. சூ. க0) என்பதற்கு, 'புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாறோகத்தார் இக்காலத்தும் பெண்மகனென்று வழங்குப' என்று சேனாவரையராலும் 'கட்புலனாயதோர் அமைதித்தன்மை யடுத்து நாணுவரையிறந்து புறத்து விளையாடும் பருவத்தாற் பால்திரிந்த பெண்மகனென்னும் பெயர்ச்சொல்' என்றும் 'பெண்மகனென்பது அத்தன்மையாரை அக்காலம் அவ்வாறே வழங்கினாராயிற்று' என்றும் இவ்வுரையாசிரியராலும் விளக்கம் எழுதப்பெற்றிருத்தலும் இங்கே அறிதற்பாலன.

உ. "உளைய வுரைத்து விடினு முறுதி, கிளைகள்வாய்க் கேட்பது நன்றே" பழமொழி. உகக

ந. (அ) "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" நாலடி. கoச. (ஆ) "வேண்டினும் வேண்டா விடினு, முறற்பால, தீண்டா விடுத லரிது" நாலடி. கoக. பழ. சு உ. (இ) "வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" (ஈ) "உறற்பால, வூட்டா கழியு மெனின்" (உ) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" குறள். உoஎ, நஎஅ, நஅo. (ஊ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது" இறை. சூ. உ. உரை. மேற்கோள். (எ) "ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்" சிலப். பதி. ருஎ.

(பிரதிபேதம்)* பெண் மனையை. † காண் ஆங்கசை. ‡ இனையைச் || யைப்பற்றி ÷ என்றுச்





அதுவேயுமன்றி (க) நீ அருளைப் பற்றுவிலையாயின் நினக்கு அனையவை பயன்தருதலில்லை; *எ - று.

நச்சினோரெனத் தன்னைப் பிறர்போற் கூறினன். நயம் - அருள் அனையவையென்றது, (உ) தைந்நீராடன் முதலியவற்றை.

இதனால், தலைவற்கு இழிவுபிறந்தது; தலைவிக்குச் †சூழ்ச்சிபிறந்தது.

‡ இஃது ஒன்பதடித்தரவும் நான்கடித்தாழிசையும் தனிச்சொல்லும் நான்கடிச்சுரிதகமும் பெற்ற ஒத்தாழிசைக்கலி. (உந)

(சுo.) சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதல்
மணங்கமழ் நறுங்கோதை மாரிவீ ழிருங்கூந்த
லுணங்கெழி லொண்டித்தி நுழைநொசி மடமருங்குல்

வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த வல்குலாய்;
௫ கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉத் தொழுதே
கண்ணுநீ ராக நடுங்கினை னின்னகா
யென்செய்தான் கொல்லோ விஃதொத்தன் றன்கட்
௧௦ பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து;
௧௨ தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த்த லேதில
நீநின்மேற் கொள்வ தெவன்;

௧௫ அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
பேரம ருண்கணின் றோழி யுறீஇய
வாரஞ ரெவ்வ முயிர்வாங்கு
மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ;
௧௯ நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
னின்முகந் தான்பெறி னல்லது கொன்னே

---

௧. (அ) "நல்லாற்று ணாடி யருளாள்க பல்லாற்றாற், றேரினு மஃதே துணை" (ஆ) "அருளற்றார், ரற்றார்" குறள். உசஉ, உசஅ; (இ) "அறனு, மருளுடையான் கண்ணதேயாகும்"(ஈ)"நெகிழ்ந்த, வருளினு ளுகு மறம்" சிறுபஞ்ச. ந., நடு.

௨. "தைஇத் திங்கட் டண்கயம் படியும், பெருந்தோட் குறுமகள்", (நற். அo: எ-அ.) எனவருதலும் காண்க.

(பிரதிபேதம்) *ஆணினென்றுள் †குட்சி, ‡ இது ஒத்தாழிசைக்கலி.

மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்லினி நாம்;
பொன்செய்வாம்;
ஆறு விலங்கித் தெருவின்க ணின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் பண்புணராந்
தேற லெளிதென்பா நாம்;
ஒருவன் சாமா றெளிதென்பா மற்று;
சிறிதாங்கே, மாணலூ ரம்ப லலரி னலர்கென
நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி
பூணாக நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

இது தலைமகற்குக் துறைநேர்ந்த தோழி தலைமகனோடு உறழ்ந்து அவனது துறைநயப்பக் கூறியது.

### இதன் பொருள்.

(௧)சுணங்கணி வனமுலைச் சுடர்கொண்ட நறுநுதன்
மணங்கமழ் நறுங்கோதை (௨)மாரிவீ றிருங்கூந்த
லுணங்கெழி *லொண்டித்தி நுழை(௩)நொசி மடமருங்குல்
வணங்கிறை வரிமுன்கை வரியார்ந்த வல்குலாய்

க (அ) "சுணங்கணி யாகத், தீர்க்கிடைப் போகா வேரிள வனமுலை" பொருந• ௩௫ - ௩௬. (ஆ) "பொன்பெறு பூஞ்சுணங்கின் மென்முலை யாய்" சிறுபஞ்ச. ௪அ.

உ. "மாரிவீழிருங்கூந்தல்" கலி. ௧௪: ௪; ௩௩: 'உ௧. "தத்த மரபிற் றோன்றுமன் பொருளே" என்னுஞ் சூத்திரவுரையில், 'மரபு என்பது பயிற்சியை; இதனுனே நூல்செய்கின்றகாலத்து வினைமுதலாகிய பொருள்கள் ஓதிய வாய்பாட்டான்வருதல் பெருவழக்கென்று கொள்ளப்படும்' என்று கூறி வினை முதலியவற்றுக்குப் பாகுபடுத் துணர்த்தப்பட்ட சொற்களன்றி மரபாற் பிறசொல் வந்ததற்கு, 'மாரிவீ ழிருங்கூந்தல்' என்பதை மேற்கோள்காட்டினர் இளம்பூரணர்; தொல். உவம. சூ. ௧எ.

௩. நொசிவு நுண்மையுணர்த்துதற்கு (அ) "நொசி மருங்குல்" என்பது மேற். தொல். உரி. சூ. எஅ. சே.(ஆ)"நொசிந்த மருங்குலள்" பெருங். (க) ௫௪: ௯௰. (இ) "நுழைநொசி மருங்குல்" நைடத. சுயம்வர. ௧௪உ, (பிரதிபேதம்) ஓன்றேத்தி.

௩௮௪ கலித்தொகை ௬0.

து: *சுணங்கு அணிந்த அழகையுடைய முலையினையும்(க)பிறைபி-றன்மையைக்கொண்ட நறிய நுதலினையும் நறிய மாலையினையுடைய மணநாறுகின்ற மழை விரும்புங் கரிய கூந்தலினையும் † கூர்மையையுடை அழ்கினையும்(உ)நோக்கினர் கண் சென்று நுழைந்துபார்க்கும் நுண்மையாலே அவர்க்கு அறியாமையைக் கொடுக்கும் மருங்குலையும் 'வளைக்குகின்ற இ-லினையுடைய வளையணிந்த முன்கையினையுமுடைய ஒள்ளிய‡ சித்திரமாகிய வ-நிறைந்த வல்குலையுடையவளே ; எ - று.

இ (௩)கண்ணார்ந்த நலத்தாரைக் கதுமெனக் கண்டவர்க்
'' குண்ணின்ற நோய்மிக வுயிரெஞ்சு துயர்செய்தல்
பெண்ணன்று புனையிழா யெனக்கூறித் தொழூஉந் தொழுதே
||கண்ணுநீ ராக நடுங்கின னின்னகா
(௪)யென்செய்தான் கொல்லோ (௫)விஃதொத்தன் றன்கட்
பொருகளி றன்ன தகைசாம்பி யுள்ளு
ளுருகுவான் போலு முடைந்து

எ - து: இனிய நகையினையுடையாய்! நின்னைநோக்கித் தொழூஉம்; —தொழுதபின், புனையிழாய்! என்னைநோக்கி, ×உலகத்திற்கண்ணுக்குநிறைந்த நலத்தினையுடைய மகளிரைக் கண்டவர்களுக்கு உண்ணின்ற காமநோய் மிகும்படி கடுக உயிர்போந் துயரைச்=செய்தல் அவர்க்குப்பெண்டன்மையன்றெனக் கூறிக் (௯) கண்ணும் உருகநின்று நடுங்கினன்; நடுங்கி இவனொருத்தன் தன்

---

௧. "சுடர்நுதல்" (கலி. இ௮: ௩.) என்பதற்கு எழுதிய வுரையும் நோக்குக.
௨. "நோக்கு நுழைகல்லா நுண்மைய" பொருந. ௮௨.
௩. "கண்ணார் கண்ண" பொருந. ௧௪௮: சிறுபாண். ௧௫.

௪. "என்செய்தான் கொல்லோ ....... உடைந்து" எனத் தோழி கூறிய வழி, 'தெருவின்கட் காரணமின்றிக் கலங்குவார்க்கண்டு' எனவும் 'அலர்முலை ....... (நாம்' எனத் தோழிகூறியவழி) 'பொன்செய்வாய்', எனவும் தலைவி உறழ்ந்துகூறினளென்றுகூறி 'இது தலைவன் வருத்தங் கூற அதனை யேற்றுக்கொள்ளாது உறழ்தலின் வழுவாய் நாண்மிகுதியாற் கடிதின் உடம்படாமையின் அமைந்தது' என்பர் நச. (தொல். பொருளி. சூ. ௪௪.)

௫. "இஃதொத்தன்" கலி. ௬௪: அ; என்பதும் அதன் குறிப்பும்பார்க்க.

௬. (அ) "மெய்யுருகிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம வெயில் வெண்ணெய்ப் பாவைபோன் மெலிகின்றாரே" சீவக. ௬௨௨. (ஆ) "கண்புனலூருமென் காதல்" தஞ்சை. ௩௧௫.

(பிரதிபேதம்) * சணங்கணிந்தழகிய முலை. † கூரிய. ‡ தந்தியாகிய. || கண்ணினீரால. ÷ தொழுதபின்னர் என்னைநோக்கி, × உலகத்திற்குக்கணணுக்கு. = செய்தயர்க்குப்பெண்.

# இரண்டாவது குறிஞ்சி உ௪. ௩௬௫

த்துப் பொருகின்ற களிற்றையொத்த தன்மைகெட்டு மனமுடைந்துளேயுள்ளே உருகுவான்போலே இராகின்றான்; இவன் ஈண்டு வந்து என்ன காரியஞ்செய்தான்கொல் என்றான்; எ - று.

ஒருத்தனென்பது இடைக்குறைந்துநின்றது.

(க) தெருவின்கண், காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்*பெயர்த்த லேதில
நீ நின்மேற் கொள்வ தெவன்

எ - து: அதுகேட்ட தலைவி நீ நம்மாற் நமக்கு நிகழ்ந்ததோர் காரணமின்றியிலே தெருவின்கட் கலங்குவார் சிலரைக் கண்டு நினக்கு ஏதிலவாயிருப்பனவற்றை நீ நின்மேல் ஏறட்டுக்கொள்கின்றதன்மை வாரணவாசியிலுள்ளார் பெறும் அருளுடைமையாகிய பதத்தை நீ நின்னிடத்தே ஏறட்டுக்கோடல்காண; இது நமக்கு என்னவிளையும்? †எ - று.

(உ) பிறர்வருத்தந் தம்வருத்தமாகக் கொண்டு ஒழுகுவதனை வாரணவாசியென்னும் ஊரிலுள்ளார் ‡பதமென்றான்.

இது "கூறிய வாயில் கொள்ளாக் காலே" (௩.) தலைவிகூறியது.

அலர்முலை யாயிழை நல்லாய் கதுமெனப்
(ச)பேரம ருண்க||ணின் றோழி யுதீஇய
(ரு)வாரளு ரெவ்வ முயிர்வாங்கு
(சு)மற்றிந்நோய் தீர மருந்தருளா ×யொண்டொடீ.

---

க. "தெருவின்கண ...... கொள்வதெவன" என்பது (அ) தோழி, தலைவற்குக் குறைநேர்ந்து வாயிலாகிக் குறைநயப்பக் கூறியவழி, தலைவி அவள்கூற்றினை யேற்றுக்கொள்ளாது மறுத்ததற்கும் (தொல். களவி. சூ. உ0. நச.) (ஆ) பாஙகியைத்தலைவிமறைத்தற்கும் (நாற்கவி. சூ. கசஎ) மேற்கோள்.

உ. "மலயத்து நின்றும்' (கோவையார். கஙக) என்புழி 'மலயத்து வாழ்வார் பிறர்க்கு வருத்தஞ் செய்யாராகலின்' என்று குறிப்பு எழுதியிருத்தலும் ஈண்டு அறிதற்பாலது.

ந. தொல். கள. சூ. உ0.

ச. "பேரம ருணகண்" கலி. கசசு: எ.

ரு. "நேரிறை வளைத்தோ ணின்றோழி செய்த, வாரஞர் வருத்தங் களைநீ யோவென" தொல். கள. சூ. உந. நச. 'நெருநலு' மேற்.

சு. (அ) "மற்றிந்நோய்தீரு மருநதருளாயொணடொடீ" "நின்முகங்காணு மருந்தினே னென்னுமால்" என்புழி நோய் தீர்தற்குக் காரணமாகிய
(பிரதிபேதம்) *பெயாதலேதகில,† என்முளா அலா ‡ பிறாபதயென்றுர் இது || என்றோழி
× ஒண்டொடீ நினமுகங்காணு...............எ-து அதுசேட்ட,

ரு௬௬ கலித்தொகை ௬0.

(க)நின்முகங் காணு மருந்தினே னென்னுமா
ஙின்முகந் தான்பெறி னல்லது கொன்னே
(உ)மருந்து பிறிதியாது மில்லேற் றிருந்திழா
யென்செய்வாங் கொல்இனி நாம்

எ - து: அதுகேட்ட தோழி அடிபரந்த முலையினையும் ஆராய்ந்த பூணையுமுடைய நல்லாய்! பெரிய அமர்த்த உண்கண்ணினையுடைய நின் தோழி

மருந்தெனவருங் காரணத்தைக் கருவிக்கண்ணும், நின்முகத்தைக் காண்டல் காரணமாக அதன் காரியமாகப் பிறந்த அருளை மருந்தாதற் றன்மையாக உடையனென வருங காரியத்தை ஒன்றென முடித்தற் கண்ணும் அமைத்துக் கொள்க. என்பர். நச். தொல். வினை. சூ. ௩எ. (ஆ) "மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீ யென்புழி, நோய்தீர்தற் கேதுவாகிய மருந்தென்னும் ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடங்கும்" என்பர் இ - வி உரைகாரர் ; இ - வி. சூ. உ௪௩. (இ) 'நோய்தீருமருந்து........என்னும்ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடங்கும்' என்பர், சேனாவரையர்; தொல். வினை. சூ. ௩எ. (ஈ) "அகலிருவிசும்பு" பெரும்பாண். க. என்பதற்கு, 'தன்னை யொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயம்' என்றுபொருள்கூறி அதற்கும்(உ)"அரசிருந்து பனிக்கும்பாசறை" முல்லை. எ௯. என்பதற்கு,'பகையரசிருந்து நடுங்குதற்குக் காரணமான பாசறை' என்று பொருள்கூறி அதற்கும், (ஊ) "புண்டாங்குவேல்" சீவக. உஉ. என்பதற்கு 'பகைவர் புண்ணைத் தாங்குவதற்குக் காரணமான வேல்' என்று பொருளும் 'வினைத்தொகை; ஏதுப்பொருள்கருவிக்கண் அடங்கும்' என்று இலக்கணமும்எழுதி அதற்கும் "மற்றிந்நோய் தீருமருந்து" என்பதை இவ்வுரையாசிரியர் மேற்கோள் காட்டியுள்ளார். அன்றியும்(எ)உயர்ந்தபால்என்பதற்கு, 'ஒருகாலைக்கு ஒருகால் அன்பு முதலியன சிறத்தற்கு ஏதுவாகிய பால் வரை

தெய்வம்' என்று பொருள்கூறி, 'உயர்ந்த பாலே நோய்தீர்ந்த மருந்து போறக் கொள்க' என்றும் எழுதியிருக்கிறார். (தொல். களவி. சூ. உ.) (ஏ)"திருந்தடி மேல்வீழ்ந்திரக்குநோய் தீர்க்கு, மருந்து நீயாகுதலான்" கலி. சுரு: க - கo. என்பது ஒப்புநோக்கற்பாலது.

க. (அ) "நின்முகங் காணு மருந்தினே னென்னுமாலென்புழிக்காட்சியை மருந்தென்றனுதலின், காணுமருந்தென்பது வினைப்பெயர் கொண்டதாம்" என்பர். சேனு; தொல். வினை. சூ. ௩எ. (ஆ) இ - வி. உரைகாரரும் இதனையே பின்பற்றுவர்; இ - வி. சூ. உசரு.

உ. (அ) "மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே" நற். அo க.(ஆ) "மருந்துபிறி தில்லாப் பெருந்துய ரெய்தி" ........ ..(இ) "மந்திர மில்லை வேறோர் மருந்தில்லை மையனோய்க்குச், சுந்தரக்குமுதச்செவ்வா யமுதவா லமுதச் சொல்லீர்" கம்ப. மாயாசனக. கசு.

## இரண்டாவது குறிஞ்சி உச. ௩௪எ

...த்தின பொறுத்தற்கரிய மனக்கவற்சியைச் செய்யும் வருத்தம் கதுமென ...யிரைவாங்கும்; அஃது உயிரைவாங்காதபடி ஒண்டொடீ! பின்னை *இந்நோய் ...தற்குக் காரணமான மருந்தை அருளாய்; அம்மருந்துதான் மிகவும் †அரி...து; நின்முகங்காண்டல்காரணமாக அதனை ஈரியமாகப் ‡ பிறந்த அருளை ...ந்தாதற்றன்மையாக உடையேனென்று கூறுகின்றான் ; ஆதலால் அவன் நின்முகத்தை இக்காலத்தே பெறின் அது மருந்தாவதல்லது வேறு ...திதும் மருந்தில்லையாயிருக்குமாயின், = திருந்திழாய்! இனி நாம் என்செய்யக் ...வேமென்றான் ; எ - று.

நின்முகங் — காணு மருந்தினேனென்றது தலைவியைக்கருதி. மற்று, ...மாற்று. கொன், காலமுணர்த்திற்று. கொல், ஐயம்.

பொன்செய்வாம்

எ - து: அதுகேட்ட தலைவி பொன்செய்வாம் என நகைக்குறிப்புக் ...ினான்.

அஃது "இசைதிரிந்திசைப்பினும்" என்னும்(க)பொருளியற்சூத்திரத்துக் ×கூறினும்.

உச ஆறு விலங்கித் தெருவின்க ணின்றொருவன்
கூறுஞ்சொல் வாயெனக் கொண்டதன் ∴பண்புணராத்
தேற லெளிதென்பா ராம்

எ - து. அவள் நகைக்குறிப்புக் கூறிப் பின்னரும் உலகவொழுக்கத்தைத் தப்பி ஒருவன் தெருவின்கணேநின்று கூறுங்கூற்றை உண்மையென்று கொண்டு அதன் உணமையை உணராமாய் நாம் அதனைத் தெளிதல் எளிதென்று சொல்லக்கடவேமென்றாள்; எ - று.

நாமென்றது உயர்த்துக்கூறியது. உளப்பாடுமாம்.

ஒருவன் (உ)சாமா றெளிதென்பா மற்று

எ - து: அதுகேட்ட தோழி பின்னை நின்கருத்து இதுவாயின் ஒருவன் சாந்தன்மை எளிதென்று கூறக்கடவேமென்றாள்; எ - று.

என்பாம், உளப்பாடு.

---

க. தொல். பொருளி. சூ. க. இச்சூத்திரத்திற் கூறியது, 'இயலா' என்றதனால், 'என் செய்வாமென்றி' வழிப் 'பொன் செய்வா 'மென்றாற்போல வினவிற் பயவாது இறைபயந்தாற் போலநிற்பனவுங்கொள்க' என்பது.

உ. (அ) "ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற், சாதலுங் கூடுமோ மற்று" கலி. சுக: கக-உ. (ஆ) "பகையகத்துச் சாவா ரெளியர்" குறள். எஉங. (இ) "சாவ தெளிதரிது சான்றாண்மை" ஏலாதி. சo.

(பிரதிபேதம்) * இன்னேலைத் தீர்த்தற்கு † அரிதென்று நின்முகங்கொண்டல்காரண ‡ பிறந்தவரே || மருந்தாகத், = திருந்திழாய் நாம் ÷ காணின்மருந்தினனென்றது, × அடக்கினும் ∴பண்புணராத்தேறல்.

௨அ சிறிதாங்கே, மாணுவூ ரம்ப லலரி *னலர்கென
நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி
பூணாக நோக்கி யிமையா னயந்துநங்
கேண்மை விருப்புற் றவனை யெதிர்நின்று
(௯)நாணடப் பெயர்த்த நயவர வின்றே.

எ-து: அதுகேட்ட தலைவி மாட்சிமைப்படாத இவ்வூரில் † அம்பல் இனி (உ) அலரினாலே அலர்வதாக வென்று கருதி நாணையும் நிறையையும் விரும்புதலில்லாத, குடிப்பிறப்பிற்குரிய ஒழுக்கம் ‡ நெஞ்சிலில்லாதவனுக்கு அவன் இரந்துபடுமென்று கூறுகின்ற அத்தன்மையே மிக இன்று காணென்றாள். அது கேட்ட தோழி நின் பூணாகத்திற் புணர்ச்சியை மனத்தாற் கருதி இரவுந் துயில்கொள்ளாளாய் நங் கேண்மையை||நயந்து நம்மை விருப்புற்றவனை நாண் அடுகையினாலே எதிர்நின்று மீட்ட நயப்பாடு∴வருதலின்று, அதற்குத்தக்கது அறிவாயென்றாள்; எ - று.

"சினனே பேதைமை நிம்பிரி÷நல்குர, வனைநால் வகையுஞ் சிறப்பொடு வருமே" (௩)என்பதனான் 'நாணு நிறையு நயப்பில் பிறப்பிலி'எனச்சினம்பற்றி ×வரினும்அஃது அவன்காதலைச்சிறப்பித்துவருதலின் அமைந்தது. பிறப்பிலி, பெயர்மாத்திரையாய் இல்லாதவென்னும் பெயரெச்சமறைக்கு முடிவாய் நின்றது. பிறப்பிலிக்கு ஆங்கே சிறிதென மாறிப் பொருளுரைக்க.

ஆங்கேயென்ற ஏகாரம், தேற்றம்.

"உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி" (௪)என்றதனால், தலைவி உறழ்ந்து கூறினாள்.

இதனால், தலைவிக்கு விருப்பமுற்று நினைத்தல் பிறந்தது.

இது தரவும் தளைவிரவி ஐஞ்சீரடி[யும்] வந்த நெடுவெண்பாட்டும் ஐஞ்சீரடிக்கிய குறுவெண்பாட்டும் இடையே முச்சீரடிவந்த கொச்சகமும் வெண்பாவும் தனிச்சொல்லும் குறுவெண்பாட்டும் ஓரடியானென்றும் ஐஞ்சீரடி

---

க. "நாணடப் பெயர்த்தல்" கலி. சஎ உ0.

உ. (அ) "அலரெழ வாருயிர் நிற்கும்" (ஆ) "கவ்வையாற் கவ்விது காம மதுவின்தேறத், நவ்வென்னுந் தன்மை யிழந்து" (இ) "காமம், வெளிப் படுந் தோறு மினிது" குறள். ககசக, ககசச, ககசடு.

ந. தொல். பொருளி. சூ. ௯க. இச்சூத்திர வுரையிலும் இப்பகுதி மேற் கோளாக இக்குறிப்பு எழுதப்பெறறுள்ளது.

ச. தொல். பொருளி. சூ. சச. இதன் பக்கம் நகசச: ச - ஆம் குறிப்புப் பார்க்க.

(பிரதிபேதம்) * அலர்க்கென † அமடவினத லரிஞலே ‡ நெஞ்சில்லாத | வனுக்கு ‖ வயந்த விருப்புறதவனோ, ∴ வருதலினதற்கு, ÷ கல்குரவெனகால் | × வரினுமவனை காதலிறப்பித்தலினிதுவமைந்தது

## இரண்டாவது குறிஞ்சி உடு. நகூகூ

வந்த (க) போக்கிலக்கணமில்லா* நிலைமண்டில வாசிரியச்சுரிதகமும் பெற்று வந்தஉறழ்கலி. † "மண்டிலங் குட்ட மென்றிவை யிரண்டுஞ், செந்தூக் கியல வென்மனார் புலவர்" (உ)என்பதனான் ‡ மண்டிலங்கொள்க. (உச)

(கூகூ.) எல்லா விலைதொத்த னென்பெறுன் கேட்டைக்காண்
செல்வங் கடைகொளச் சாஅய்ச் சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
பல்லூழ் பெயர்க்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை;

எ எல்லாநீ, முன்னத்தானென்று குறித்தாய்போற் காட்டினை
நின்னின் விடாஅ நிழற்போற் றிரிதருவா
யென்னீ பெறாதது தென்;

க0 சொல்லின், மறாதீவாள் மன்னோ விவள்;
செறாஅது, ஈத்த விரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற்
சாதலுங் கூடுமா மற்று;

கந இவட்கீந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள்
யாதுநீ வேண்டியது;

கரு பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி னின்றோழி யென்னை
யருளீயல் வேண்டுவல் யான்;

கஅ அன்னையோ, மண்டமர் அட்ட களிறன்னான் றன்னையொரு
பெண்டி ரருளக் கிடந்த தெவன்கொலோ;

உ0 ஒண்டொடீ, நாணிலன் மன்ற விவன்;

ஆயின் ஏஎ;

உஉ பல்லார்க் கெள்ளப் படுமடன் மாவேறி
மல்லலூ ரான்கட் படுமே நறுநுதல்
னல்காள்கண் மாறி விடினெனச் செல்வானை

௧. இசசெய்யுள் போக்கிலக்கணமில்லாதஆசிரியசுரிதகம்பெற்ற உறழ் கலிக்கு மேற்கோள்; தோல். செய். சூ.கதிசு. பேர். நச்.

௨. தோல். செய். சூ. ககஎ.

(பிரதிபேதம் *நிலைமண்டல †மண்டலக்குட்ட ‡மண்டலங்கொள்க.





மெள்ளி நகினும் வரூஉ மிடையிடைக்
கள்வர்போ னோக்கினு நோக்குங் குறித்தது
கொள்ளாது போகாக் குணனுடைய னெந்தைதன்
னுள்ளங் குறைபடா வாறு.

இது தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி அவனது நீக்கத்துக்கண் அவன்குறை *மறைத்து ஏற்பன சொல்லித் தலைமகளைக் குறைநயப்பித்தது.

இதன் பொருள்.

(க) எல்லா (உ) விழுத்தொத்த னென்பெறுன் கேட்டைக்காண்
(௩)செல்வங் கடைகொளச் சாஅய்ச் (௪)சான்றவ
ரல்லல் களைதக்க கேளி ருழைச்சென்று
(௫)சொல்லுத லுற்றுரைக் கல்லா தவர்போலப்
(௬)†பல்லூழ் பெயர்த்தென்னை நோக்குமற் றியானோக்கின்
மெல்ல விறைஞ்சுந் தலை

௧. (அ) "எல்லாவிஃதொத்தனென்பெருன் கேட்டைக்காண்" என்பது எல்லா வென்பது பெண்பான் மேல்வந்ததற்கும் (தோல். பொருளி. சூ. உச. 'முறைப்பெயர்' இளம்;) (ஆ) "எல்லா விஃதொததன்" என்பது இடைக்குறையாகிய ஒத்தன் என்பது ஒருத்தன் எனக் குறிப்பானறியவந்ததற்கும்(நன். பெயரி. சூ. கஉ. மயிலை) மேற்கோள்.

௨. ""இஃதொத்தன்" (கலி. ௬௪: அ) என்பதன் குறிப்புப்பார்க்க.

௩. "நல் கூர்ந் துஞ் செல்வ ரிரவாதார்" நாலடி. உ௭0.

௪. "புனத்தே'வருவர்நல் லோர்குறை போலப் புகலவொன் று, மனத்தே யெழுஞ் சொல்ல மாட்டார் வருந் துவர் வண்டலைழகொண், டினததே பிரிந்த கலைவின வாசித்ப ஈஙகிவர்தா, நினைத்தே யுழல்கின்ற தென்னறி யேனென் று நேரிழையே" அம்பிகா. அஅ.

௫. "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார்" (குறள்-௧0௫௩)என்புழி, கடனறித லென்பதற்கு மானமறிதலென் று பொருளிசைத்து, 'அதனையறிதல் - சொல்லுத லுற்றுரைக்கலாகாமைக் கேதுவாய அதனியல்பினை யறிதல்' என இசசொற்றொடரை முதற்சார்த்தி விளக்கமெழுதியிருத்தல் இங்கே அறிதற்பாலது.

௬. (அ) "கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கம்"(ஆ)"நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு" யிறைஞ்சினா ளஃதவள், யாப்பினு ளட்டிய நீர்" †(இ) "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற், றானோக்கி மெல்ல நகும்" குறள். ௧0௯௨.. ௧0௯௩. ௧0௯௪. (ஈ) "தன்னையான் முகத்தை நோக்கிற் றான் முலை முகத்தை நோக்கும்" சீவக. ௧௯௨௬.

(பிரதிபேதம்) * மருமற்கேற்பன † பல்லூழ்ப்பெயர்த்த.

இரண்டாவது குறிஞ்சி உ௫. ௩௪௧

எ - து: ஏடீ! இவனொருத்தன் என்குறைபெறுதவன்? *இவன் கேட்டைப் பாராய்; (க) அறிவுடையோர் தம்முடைய செல்வம் முடிவை அடைகையினாலே மிடிகதுத் தம்முடையவருத்தத்தைக் களைதல்தக்க (உ) உறவானவரிடத்தே சென்று தங்குறையை அவர்க்கு வாய்விட்டுச் சொல்லத்தொடங்கிப் பின்னை அதனை முடியச சொல்லமாட்டாதிருப்பாரைப்போலத் தான் (ங) கூறக் கருதியதனைக் கைவிட்டு என்னைப் பலமுறையாகப் பார்க்கும்; †பின்னையான் தன்னைப்பார்க்கின் தான் மெத்தெனத தலையிறைஞ்சி ‡நிற்கும்; எ - று.

இது தலைவன் தம்மிடத்து வருகின்றமைகண்டு தலைவிக்குக்கூறிப், பின்னர் அவனெதிர்சென்று அவனை || நோக்கிக் கூறுகின்றாள்.

எ (ச) ×எல்லாநீ, முன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினை
(ரு) நின்னின் விடாஅ (சு) நிழற்போற் றிரிதருவா
யென்னீ **பெறாததீ தென்

எ - து: எடா! நீ குறிப்பாலே எம்மோடு ஓர் நட்புச்செய்யக் குறித்தாய் போல எமக்கு அறிவித்தாயாய் நின்னைவிட்டு நீங்காத நிழற்போல என்னை விட்டுநீங்காமற்றிரி தருகின்றவனே! நீ பெறாத குறை ††யாது? அதனை இது வென்று ‡‡கூறு; எ - று.

இது குறையுறவுணர்தல்.

க. "இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந், திண்மையுண் டாகப் பெறின்" குறள். கூஅஅ.

உ. (அ) "செழுங்கேளிர் நிழல்சேர" . . . . . (ஆ) "பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல், சுற்றத்தார் கணணே யுள" குறள். டிஉக.

ங. "கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக், கரந்த காமம்" அகம் ககூஅ.

ச. (அ) "எல்லாநீ . . . . . . . பெறாததீ தென்" என்பது தோழிதலைவனை

விளித்துக்கூறலின் வழுவாய் அமைந்தது" என்பர், நச. (தொல். பொருளி. சூ. உசு.) (ஆ) விளியேற்குமென எடுத்தோதாதனவற்றுள் இருபாற்கும் பொதுவாகிய ஆகார வீறுகிய எல்லாவென்பது எடா வென்னும் பொருளில் வருதற்கு "எல்லாரீ மூன்னத்தா னென்று குறித்தாய்போற்காட்டினே" என்பது மேற். தொல்.விளி. சூ. கஉ. நச்.

ரு. "நின்னின் விடாஅ... .. . .. ..பெருததிதென்" என்பது குறையுற வுணர்தற்கு மேற்கோள்; தொல். களவு. சூ. ௩௬. நச.

சு. "நிழறன்னே, வீயா தடியுறைந் தற்று" குறள். உ0அ.

(பிரதிபேதம்) *இவளுடையகேட்டை.† பின்யான், ‡ நிறகுமெனத் தோழி தலைவியை நோக்கிக்கூறினள் இது, || நோக்கி மேற்கூறுகின்றுனென்று கொள்க, × எடாரீ **பெருததிதென் ††யாதுதான் அதனை, ‡‡ கூறென்றுள.

நூஎஉ கலித்தொகை கூக.

க0 சொல்லின், மறுதிவாண் மன்னோ விவள்

எ - து: *யான் என் குறையைசசொல்லின் இவள் மிகவும் மறுதிரு ...னோ ; † எ - று.

இது தலைவன் தன் நெஞ்சோசொவினது. "ஐயக் கிளவி யாடூஉவிற் குரித்தே" (ரு)என்பதனுன் ஐயக்கிளவி தலைவற்குரித்தாய் வந்தது.

மறுதீவாள், வினைத்திரிசொல். ஓகாரம், வினு.

கக (உ)செறுஅது, (௩)ஈத விரந்தார்க்கொன் றுற்றுது வாழ்தலிற் சாதலுங் கூடுமா மற்று

எ - து: அங்ஙனம் உசாவித் தம்பால் இரந்தவர்களுக்கு ‡யாதானு மொன்றைமுகமாறு து ஈதலைநடத்தாதுஉயிர் || வாழலிற்பின்னைசசாதலுங்கூடு மென்றுன் ; எ - று

௧௩. (அ) இவடந்தை, காதலின் யார்க்குங் கொடுக்கும் விழுப்பொருள் யாதுநீ வேண்டி யது

---

௧. தொல். பொருளி. சூ. ௪௪. இசகுத்திரவுரையில் இச்செய்திக்கே "சொல்லின் ........ ..விவர்" என்பது மேற்கோள்.

௨. (அ) "உயர்க்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினுந், தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ, யின்புற விடுதி யாயிற் சிறிது, குன்றியுங் கொள்வல்" (ஆ) அகனக வாரா முகனழி பரிசி, லுளி லானர் வேளா ரல்லர்" (இ) "உணவெணகிழ்ந் தீயிற் சிறிதெனினுங் குன்றுபோற் கூடும் பயன்" (ஈ) "இல்லார் மொழிந்தவை, மென் மொழியா லுண்ணெகிழ்ந் தீவானேல் விணனோரா, வின்மொழியா லேத்தப்படும்" (உ) "நகை முகமே காண்மலரா, வின்மொழியின் வாய்மையே தீங்காயா-வண்மை, பலமா நலங்கனிந்த பண்புடையார்"

௩. (அ) "இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்காற், றன்மெய் துறப்பான் மலை" கலி. ௪௩: உ௬ - உ௭. (ஆ) "கருங்கட லுடுத்த மல்லன் ஞாலத்துச, செம்மையின் வழாஅது கொடைக் கடன் பூண்டு, வாழ்வது பொருந்தா தாகிற், சாவது மினிதவர் வீவது முறு மே" யா-வி. சூ. ௫௩. (இ) "மன்கலில் பெருங்கொடை மருவி மண் ணுனோ, ருள்கிய பொருளெலா முதவி யற்றபோ, தெள்கலி லிரவ லர்க் கீவ தின்மையால், வெள்கிய மார்தரின்" கம்ப. கார்காலப் ௯௦௩,

௪. (அ) "காமஞ்சாலா விளமை யோள்வயின்" என்னும் சூத்திரவுரையில் "புல்லித்தோன்றுங் கைக்கிளையெனவே காமஞ்சான்ற இளமையோள் கண் நிகழுங்கைக்கிளை இத்துணைச சிறப்பின்றாயிற்று; அஃது 'எல் (பிரதிபேதம்) * அதுகேட்ட தலைவன்யான் † எனத் தன்னெஞ்சொடுசொல்லுள். இது "மைக ளைவியாடவர்க்கு, ‡யாதானுமொன்று முகமருஅ, ||வாழ்தலின்.

வ  எ-து அது கேட்ட தோழி இவள் தந்தைஇரப்பார்மேலுள்ள*காதலினால்
வ இரவலர்யார்க்குஞ் சிறிய †பொருள்களைக் கொடுக்கும், நீவேண்டியபொருள்
ெ பாதுதானென்றாள்; எ - று.

இஃது "உயர்மொழிக் குரிய வுறழுங் கிளவி, யையக் கிளவியாடூவிற் குரித்தே" (க)என்பதனால், தோழி உறழ்ந்துகூறினாள்.

கடு பேதாய், பொருள்வேண்டும் புன்கண்மை யீண்டில்லை யாழ
மருளி மடநோக்கி(உ)னின்றோழி யென்னை
யருளியல் வேண்டுவல் யான்

எ - து: அதுகேட்ட தலைவன் கூற்றின் குறிப்பறியாதவளே! என்னிடத்துப் பொருளை இரக்கும் மிடியில்லை. மருண்டு மடப்பத்தையுடைத

---

லாவிகொழுத்தன்' என்னுங் கலியுள் 'இடைடர்தை, காதலின்யார்க்கும் ... ......வேண்டுவல்யான்" எனவரும். இது கைகோ ளிரண்டினுங் கூறத்தகாத வாய்பாட்டாற் கூறலிற் கைக்கிளை யென்றார். குறிப் பென்றதனாற் சொல்லியின்புறினும் தலைவன்றன் குறிப்புநிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாதென்பதூஉம் அகத்து நிகழ்ச்சியறியும் மனை வியர்க்காயிற் புலனாமென்பதூஉங் கொள்க" என்பர் நச; தொல்.

அகத். சூ. ௫௦. (ஆ) "வைகல் வைக லைய விவ்வழிக், கையுறையேந்தி னிர் வருதிர் மற்றலீ, தமிகலம் யாமெமக் குறைப்பிற், பெறுகுவி ரெந்தை பெருவண்மையனே" தமிழ்நெறி. மேற்கோள்.(இ)"வேண்டுவ கொடுக்கும், போதல் வேண்டா பொருட்குறை வுண்டெனி, னேத மில்லை யிவணி ராமின்" பெருங். (௩) சு: க அக - ௩.

